ஸ்ரீ

ஸ்ரீமதே ராமாநுஜாய நம



# நூற்றெட்டுத் திருப்பதி வெண்பா.

ஆசிரியர்

**மு. ஆதிமூலம்**

ஒய்வு பெற்ற ஆசிரியர்

நல்லாண்பிள்ளை பெற்றாள்

**பூங்கோல் பதிப்பகம்**

54 / H34 பொன்விழா நகர்

திருநெல்வேலி - 627 011.

| | | |
|---|---|---|
| Title | : | Nootriyettu Thirupathi Venpa<br>*(Hundred and Eight Temple Verses)* |
| Author | : | M. Audimoolam |
| Language | : | Tamil |
| Subject | : | Vaishnavite temples |
| Edition | : | First Edition, 2005 |
| No of Copies | : | 1000 |
| Pages | : | viii + 96 = 104 |
| Copy right | : | To author |
| Size | : | 1/8 Demmy |
| Printer | : | Muthuletchumi Offset Press,<br>Palayamkottai - 627 002. |
| Prize | : | Rs. 30/- |

*This Book is Published with the Financial Assistance of Tirumala Tirupati Devasthanams under Their Aid to Authors Scheme for Religious Publications.*

# அணிந்துரை

தமிழிலக்கியங்களைப் போல ஒரு நெடிய வரலாற்றைச் சமய இலக்கியங்களுக்குள் பொதிந்து வைத்திருக்கும் மொழிகள் எத்தனை என்று எனக்குத் தெரியாது. ஆனால் தமிழ்ச் சமூகத்தின் வரலாறு அவற்றுள் புதைந்து கிடப்பது மட்டும் நமக்குத் தெரியும். ஒவ்வொரு சமயமும் வெவ்வேறு வகையான பரிமாணங்களில் இந்தப் பணியினைச் செய்திருக்கின்றன.

தமிழ் நாட்டு வைணவமும் பல பரிமாணங்களைக் கொண்டது. சாதியினையும் மொழியினையும் குறித்த விவாதங்களை வைணவமே தமிழ் நாட்டில் முதன்முதலாகத் தொடங்கியது. வைணவத்தின் குறிப்பிடத் தகுந்த மற்றொரு பரிமாணம் நூல்வகை முயற்சிகளாகும். மரபு வழியான இலக்கிய வகைகளோடு புதுப்புதிய நூல் வகைப்பாடுகளையும் வைணவர் தமிழில் படைத்தளித்தனர்.

திருவாய்மொழி ஈட்டின் பிரவேச சங்கிரகம் திருவாய்மொழி வாசமாலை என்னும் விவரணமாலை (திருக்கோனேரி தாஸ்யை என்னும் அம்மையார் எழுதியது) பெரிய திருமுடியடைவு வார்த்தாமாலை (மேற்கோள் தொகுப்பு சித்தாந்த விளக்கநூல்) ரகஸ்யங்கள் எனப்படும் வினா-விடை நூல்கள் என வைணவ எழுத்துலகம் தொன்மை சார்ந்த விரிந்த வரலாறு உடையது.

அவ்வகையில் நூற்றெட்டுத் திருப்பதி வெண்பா என்னும் நூல் வைணவ 'அடியார் தொண்டர்' திரு. ஆதிமூலம் அவர்களால் ஆக்கப்பெற்று இப்போது வெளிவருகின்றது. நூற்றெட்டுத் திருப்பதி அந்தாதி, நூற்றெட்டுத் திருப்பதி தாலாட்டு ஆகிய நூல்களின் தொடர்ச்சியாக இந்நூலைக் கொள்ள வேண்டும்.

*நூற்றெட்டுத் தலங்களிலும் உள்ள திருமாலின் பெயரோடு தாயார் (இச்சொல் வைணவத்தின் மனித நேய ஆக்கம்) திருப்பெயர், ஊர்வலத் திருமேனியின் பெயர், விமானத்தின் பெயர் ஆகியவை ஒரு வெண்பாவின் நான்கடிக்குள் பதிவு பெறுகின்றன. ஒவ்வொரு வெண்பாவிலும் அந்தந்த திருப்பதியின் 'தாயார்' பெயர் இடம் பெறுவது நூலாசிரியர் வைணவ சித்தாந்தத்தில் உளந்தோய்ந்தவர் என்பதை வெளிப்படுத்துகிறது.*

*ஆழ்வார்களின் சொற்கூட்டுகள் பெரும்பாலான பாக்களில் பதிவாகி உள்ளது. நூலாசிரியரின் கல்விப் புலமைக்கு இதுஒரு சான்று. ஆழ்வார்கள் அரிதே பயன்படுத்தும் விண்டு (விஷ்ணு) என்னும் தமிழ் வடிவம் பல இடங்களில் காணக்கிடக்கிறது. வெண்பாவுக்குச் சுவைதரும் ஈற்றடிகள் கச்சிதமாக அமைந்துள்ளன.*

*நூலாசிரியரை வாழ்த்தி வணங்குவோம்.*

**முனைவர். தொ. பரமசிவன்**
பேராசிரியர் & தலைவர்
தமிழ்த்துறை,
மனோன்மணியம் சுந்தரனார் பல்கலைக்கழகம்
திருநெல்வேலி.

# நூற்றெட்டுத் திருப்பதி வெண்பா

## முன்னுரை

*ஆழ்வார்களால் மங்களா சாசனம் செய்யப்பட்ட திருப்பதிகள் 108. இத்திருப்பதிகளின் வரலாற்றை பல அறிஞர்கள் வெளியிட்டுள்ள நூல்களின் வாயிலாகவும், நாலாயிரத் திவ்யப் பிரபந்தத்தின் வாயிலாகவும் படித்து ஆனந்தமடைந்துள்ளேன்.*

*இந்த 108 திருப்பதிகளையும் போற்றி வெண்பாவினால் ஒரு நூல் இயற்ற வேண்டும் என என் மனதில் ஓர் அவா எழுந்தது. இதற்கு உறுதுணையாக திவ்யகவி ஸ்ரீபிள்ளை பெருமாள் ஐயங்கார் அவர்களின் அஷ்டப்பிரபந்த நூலில் அடங்கியுள்ள "**நூற்றெட்டுத் திருப்பதி அந்தாதி**" என்ற நூலினையும் மற்றும் "**தி லிட்டில் பிளவர்**" கம்பெனியால் வெளியிடப்பட்ட 108 ஸ்ரீ வைஷ்ணவ திவ்ய தேச வைபவங்களின் வரலாற்று நூலினையும் கொண்டு "**நூற்றியெட்டு திருப்பதி வெண்பா**" என்ற நூலை அடியேன் சிற்றறிவுக்கு எட்டியவாறு இயற்றியுள்ளேன். இதில் குற்றமிருப்பின் பெரியோர்கள் பொறுத்தருளவேண்டுகிறேன்.*

*இந்நூலில் ஸ்ரீ பிள்ளை பெருமாள் ஐயங்கார் அவர்கள் வகுத்த திருப்பதிகளின் வகையையே அடியேனும் பின்பற்றியுள்ளேன்.*

| | | |
|---|---|---|
| அதாவது: | சோழநாட்டுத் திருப்பதிகள் | 40 |
| | பாண்டிய நாட்டுத் திருப்பதிகள் | 18 |
| | மலைநாட்டுத் திருப்பதிகள் | 13 |
| | நடுநாட்டுத் திருப்பதிகள் | 2 |
| | தொண்டை நாட்டுத் திருப்பதிகள் | 22 |
| | வடநாட்டுத் திருப்பதிகள் | 12 |
| | திருநாடு | 1 |
| | **ஆகமொத்த திருப்பதிகள்** | **108** |

இத்திருத்தலங்களில் எழுந்தருளியுள்ள பெருமாளின் திருநாமம், பிராட்டியார் திருநாமம் மற்றும் எழுந்தருளியுள்ள நிலை (நின்ற, இருந்த, கிடந்த திருக்கோலங்கள்) அத்தலங்களில் நிகழ்ந்த நிகழ்ச்சி ஆகியவற்றை கூடுமானவரை குறிப்பிட்டுக் காட்டியுள்ளேன் ஒருசில வெண்பாக்களில் பிராட்டி மார்களின் திருநாமங்கள் குறிப்பிடப்படாமலும் உள்ளது. ஆனால் அத்தலத்தைப் பற்றிய குறிப்புகளில் அனைத்தும் தெரிவிக்கப்பட் டுள்ளன.

இந்நூலினைப் படித்து பலவெண்பாக்களிலுள்ள பிழைகளைத் திருத்தி நன்கு அமையுமாறு அருள்கூர்ந்து உதவிய நல்லாண்பிள்ளை பெற்றாள் புலவர் திரு. நா. ஆதிகேசவனார் அவர்கட்கும் சென்னை - சைதை - அருட்கவி புலவர். அ.இரா. திருவேங்கடனார் அவர்கட்கும் என் உளங்கனிந்த நன்றியைத் தெரிவித்துக்கொள்ளுகிறேன்.

மேலும் இந்நூலை நன்முறையில் எழுதி விரைவில் வெளியிட வேண்டும் என்று என்னை ஊக்குவித்த அமரர் திரு. அ.பெ. இராமசாமி (ஓய்வு பெற்ற ஆசிரியர், நல்லாண்பிள்ளை பெற்றாள்) அவர்களையும் மனதார போற்றுகிறேன்.

இந்நூலுக்கு என்வேண்டுகோளுக்கு இரங்கி மனமுவந்து அணிந்துரை நல்கிய மனோன்மணியம் சுந்தரனார் பல்கலைக்கழக தமிழ்த்துறைத்தலைவர் பேராசிரியர் முனைவர் தொ.பரமசிவன் அவர்களுக்கு என்மனமுவந்த நன்றியை வணக்கத்துடன் தெரிவித்துக் கொள்ளுகிறேன்.

இந்நூலைப் பதிப்பித்து வெளியிடுவதற்கு வேண்டிய முயற்சியை மேற்கொண்டு உதவிய எனது மகன் பேராசிரியர் ஆ. செல்லபெருமாளுக்கு (பாளை, தூய சவேரியார் கல்லூரி) என் அன்பான வாழ்த்துக்கள்.

இந்நூலை வெளியிடுவதற்கு வேண்டிய நிதிஉதவி அளித்த

*திருமலை திருப்பதி ஆலய தேவஸ்தானக் கமிட்டியினருக்கு அடியேனின் நன்றி உரித்தாகுக.*

*இந்நூலை சிறந்த முறையில் அச்சிட்டுக் கொடுத்த பாளையங்கோட்டை முத்துலெட்சுமி ஆப்செட் பிரஸ் உரிமையாளர் திரு.சபாபதி அவர்களுக்கும் என் மனமார்ந்த நன்றி.*

*இந்நூலை எழுதுவதற்கு என் உள்ளிருந்து அருள்பாலித்த திருமகள் கேள்வனாகிய திருவேங்கடத்தான் திருவடித் தாமரையை என்னுடைய மனம், மொழி, மெய்களால் வணங்கி ஏத்தி வழிபடுகின்றேன்.*

*இந்நூலை அனைவரும் படித்து இன்புற்று எம்பெருமான் திருவருளுக்கு பாத்திரராக வேண்டுமென்று அடியேன் பிரார்த்திக்கின்றேன்.*

*நாள்: 25.7.2005*

*இங்ஙனம்,*

**மு. ஆதிமூலம்**

ஓய்வு பெற்ற ஆசிரியர்
நல்லாண்பிள்ளை பெற்றாள் (அஞ்சல்)
செஞ்சிவட்டம்
விழுப்புரம் மாவட்டம், தமிழ்நாடு
Pin: 604 152

# பொருளடக்கம்

ஸ்ரீ

ஸ்ரீமதே ராமாநுஜாய நம

# நூற்றெட்டுத் திருப்பதி வெண்பா

## (தனியன்)

### திருமால்

*அத்தியிடர் தீர்த்தருள்செய் ஆதிமூலன் தாள்மலரை*
*பத்தியுடன் போற்றிப் பணிந்துயான் - முத்திதரும்*
*விண்டுபதி நூற்றெட்டும் வெண்பாவிற் பாடலுற்றேன்*
*தண்டுளவன் தண்ணருளால் தான்.*

### திருமகள்

*வையமொடு வானேத்தும் வைகுந்த நாதன்தன்*
*துய்யவல மார்பினில் தோய்ந்தருளும்-செய்யவளாம்*
*சீரார் திருமகளின் சேவடியை நண்ணிதொழ*
*வாராது காப்பள் வழு.*

### சேனை முதலியார்

*சேர்வரிய வைகுந்தம் சேர்ந்தங்கே வாழ்கின்ற*
*நேர்வரிய நித்திய முத்தர்க்கும் -தேர்வரிய*
*பொற்பிரம் பேந்தும் புனிதமிகு சேனையர்கோன்*
*நற்கழலே காப்பாம் நமக்கு.*

## நம்மாழ்வார்

*வேதம் தமிழ்செய்த வித்தகன் வண்குருகை*
*நாதன் சடகோபன் நன்மாறன் – பாதம்*
*பணிந்தேன்நூற் றெட்டுப் பதிகளையே பாடத்*
*துணிந்தேன் வெண்பாவில் தொகுத்து.*

## ஆழ்வார்கள் பன்னிருவர்

*பொய்கைபேய் பூதன் புகழ்மழிசைக் கோன்மாறன்*
*ஐயன் மதுரகவி ஆலிநாடன் –தூய்யவான்*
*பட்டரொடு சேரலர்கோன் பாணனன்பர் தாள்தூளி*
*கட்டெழில் கோதையரும் காப்பு.*

## உடையவர்

*நாரணினின் நற்சமயம் நானிலத்தில் தான்வளர்க்க*
*ஆரணத்தின் உட்பொருளை ஆய்ந்துரைத்த–பூரணனாம்*
*ஏரார் பெரும்பூதூர் எந்தை எதிராசன்*
*காரேய் கருணையனே காப்பு.*

## அவையடக்கம்

*மாலுறையும் நற்பதிகள் மாண்பையெலாம் போற்றியொரு*
*நூலியற்ற யானும் நுழையுமிது–நூலிழையால்*
*கற்றூணைக் கட்டிக் கரத்தா லிழுக்கமுனை*
*வுற்ற செயலுக்கே ஒப்பு.*

# நூல்

## I. சோழநாட்டுத் திருப்பதிகள் - 40

### 1. திருவரங்கம் (ஸ்ரீ ரங்கம்)

இக்கோயில் திருச்சி பேருந்து நிலையத்திருந்து 10 கி.மீ. தூரத்தில் உள்ளது. காவிரி கொள்ளிட நதிகளின் நடுவே அமைந்துள்ளது. ஸ்ரீவைஷ்ணவ திவ்ய தேசங்களிலே முதன்மையானதாக "கோயில்" என்ற சிறப்புப் பெயருடன் விளங்குவதாகும். திருச்சியிலிருந்து டவுன்பஸ்ஸில் செல்லலாம்.

மூலவர் : ஸ்ரீரங்கநாதன் [பெரியபெருமாள்]
அழகிய மணவாளன்
புஜங்கசயனம் [ஆதிசேஷ சயனம்]
தெற்கே திருமுக மண்டலம்

உத்ஸவர் : நம்பெருமாள்

தாயார் : ஸ்ரீரங்கநாயகி [ரங்கநாச்சியார்]

தீர்த்தம் : காவிரி, கொள்ளிடம், சந்திர புஷ்கரணி

ஸ்தலவிருஷம் : புன்னை

விமானம் : பிரணவாக்ருதி.

விசேடம் : தானாகவே உண்டான ஸ்தலங்கள் எட்டில் இதுவும் ஒன்று. மதுரகவி ஆழ்வாரைத்தவிர 11 ஆழ்வார்களால் மங்களாசாசனம். மொத்த பாசுரங்கள் 247.

தானாக உண்டான தலங்கள் எட்டில் ஸ்ரீரங்கம் தவிர்த்து மற்றவை-ஸ்ரீமுஷ்ணம், திருவேங்கடம், சாளக்கிராமம், நைமிசாரண்யம், வானமாமலை, புஷ்கரம், பத்ரிநாத் ஆகும்.

மங்களாசாசனம் செய்த ஆழ்வார்களும் அவர்கள் பாடிய பாசுரங்களின் எண்ணிக்கையும் பின்வருமாறு.

1. பெரியாழ்வார் ........................ 35 பாசுரங்கள்
2. ஆண்டாள் ........................ 10 பாசுரங்கள்
3. குலசேகராழ்வார் ...................... 31 பாசுரங்கள்

4. திருமழிசையாழ்வார் ........................ 14 பாசுரங்கள்
5. தொண்டரடிப்பொடியாழ்வார் ........... 55 பாசுரங்கள்
6. திருப்பாணாழ்வார் ........................ 10 பாசுரங்கள்
7. திருமங்கையாழ்வார் ........................ 73 பாசுரங்கள்
8. பொய்கையாழ்வார் ........................ 1 பாசுரம்
9. பூதத்தாழ்வார் ........................ 4 பாசுரங்கள்
10. பேயாழ்வார் ........................ 2 பாசுரங்கள்
11. நம்மாழ்வார் ........................ 12 பாசுரங்கள்

ஆக 247 பாசுரங்கள்

1. **வையத்தை வாழ்விக்க வைகுந்தம் வீட்டிறங்கி**
**துய்யபுனல் காவிரிசூழ் தொன்னகராம்-வையமேத்தும்**
**தென்னரங்கம் மேவிதுயில் சீரங்க நாதனொடு**
**பொன்னரங்க நாயகியைப் போற்று**

## 2. உறையூர் (திருக்கோழி)

இக்கோயில் திருச்சி நகராட்சியிலேயே ஒரு பகுதி. திருச்சி மெயின்கார்டுகேட் பஸ் மார்க்கத்தில் உறையூர் (அ) நாச்சியார் கோயில் என்ற இடத்தில் இறங்கலாம்.

மூலவர் : அழகிய மணவாளன். நின்றதிருக்கோலம், வடக்கே திருமுக மண்டலம்.

தாயார் : கமலவல்லி நாச்சியார்
பெருமாள் பக்கத்திலேயே வீற்றிருக்கும் நிலை. [தாயாருக்குத் தனி சந்நிதி இல்லை].

தீர்த்தம் : கல்யாண தீர்த்தம் சூரியபுஷ்கரணி

விமானம் : கல்யாண விமானம்

விசேடம் : சோழமன்னனின் திருமகளான கமல வல்லியை இங்கு வந்து பெருமாள் திருமணம் புரிந்து கொண்டதாக வரலாறு. திருப்பாணாழ்வார் அவதாரஸ்தலம்.

மங்களாசாசனம் : திருமங்கையாழ்வார் –1 பாசுரம்
குலசேகராழ்வார் –1 பாசுரம்

2. **ஆழிநீர் வண்ணன் அழகு மணவாளன்**
**ஊழி முதல்வன் உறந்தையான் -கோழிக்கோன்**
**காதன் மகளார் கமலவல்லி கைப்பிடித்தான்**
**பாத மலரிணையைப் பற்று.**

## 3. திருத்தஞ்சை மாமணிக்கோயில்

இக்கோயில் தஞ்சாவூர் ஜங்ஷனிலிருந்து 4 கி.மீ தூரத்தில் வெண்ணாற்றங்கரையில் உள்ளது. இந்த ஆற்றங்கரையிலேயே மூன்று கோயில்கள் உள்ளன. அவை 1. தஞ்சை மாமணிக்கோயில் 2. மணிக்குன்ற பெருமாள் கோயில் 3. தஞ்சையாளி நகர் என்பனவாகும். இம்மூன்று கோயில்களும் சேர்ந்து ஒரே திவ்ய தேசமாக கருதப்படுகிறது. தஞ்சையிலிருந்து டவுன் பஸ்ஸில் வரலாம்.

1. தஞ்சை மாமணிக் கோயில்

மூலவர் : நீலமேகப் பெருமாள்
[வீற்றிருக்கும் திருக்கோலம்]
கிழக்கே திருமுக மண்டலம்.

தாயார் : செங்கமலவல்லி.

தீர்த்தம் : அம்ருத தீர்த்தம், கன்னிகா புஷ்கரணி
வெண்ணாறு.

விமானம் : சௌந்தர்ய விமானம்

பிரத்யக்ஷம் : பராசரமுனி

2. மணிக்குன்றம்

மூலவர் : மணிக்குன்றப் பெருமாள்
[வீற்றிருந்த திருக்கோலம்]
கிழக்கே திருமுக மண்டலம்.

தாயார் : அம்புஜவல்லி.

தீர்த்தம் : ஸ்ரீ ராம தீர்த்தம்

வீமானம் : மணிக்கூட விமானம்

பிரத்யக்ஷம் : மார்க்கண்டேயர்.

3. தஞ்சையாளிநகர்

மூலவர் : நரஸிம்மன்
வீற்றிருந்த திருக்கோலம்,
கிழக்கே திருமுக மண்டலம்

தாயார் : தஞ்சை நாயகி.

தீர்த்தம் : சூர்ய புஷ்கரணி, ஸ்ரீ ராமதிர்த்தம்

விமானம் : வேத சுந்தர விமானம்

பிரத்யக்ஷம் : மார்க்கண்டேயர்

விசேடம் : மூன்று கோயில்களும் சேர்ந்து ஒரே திவ்ய தேசமாகப் பாடல்பெற்றுள்ளன.

மங்களசாசனம் : 1. திருமங்கையாழ்வார் – 3 பாசுரங்கள்
2. பூதத்தாழ்வார் – 1 பாசுரம்
3. நம்மாழ்வார் – 1 பாசுரம்.

3. **தஞ்சையாளி யம்மான் தடந்தோள் நரசிம்மன்**
**தஞ்சை மணிக்குன்றன் தண்டுளவன் - தஞ்சைநகர்**
**மாமணிக் கோயில் மகிழ்ந்தமர் நீலமேகன்**
**தூமலர்ப் பாதம் தொழு.**

தடந்தோள் - பெருமைமிகுந்ததோள்

## 4. திருஅன்பில்

இத்தலம் திருச்சி - கல்லணை, கும்பகோணம் பஸ்மார்க்கத்தில் உள்ளது. திருச்சிக்கு சமீபம் லால் குடிக்கு கிழக்கே 8 கி.மீ. தொலைவில் உள்ளது. கொள்ளிட நதியின் வடகரையில் உள்ளது. திருச்சியிலிருந்து பஸ்ஸில் வரலாம்.

மூலவர் : வடிவழகிய நம்பி. புஜங்க சயனம்
கிழக்கே திருமுக மண்டலம்.

உத்ஸவர் : சுந்தர ராஜன்

தாயார் : அழகியவல்லி நாச்சியார்.

தீர்த்தம் : மண்டூக புஷ்கரணி, கொள்ளிடம்

விமானம் : தாரக விமானம்

பிரத்யக்ஷம் : பிரம்மா, வால்மீகி

மங்களாசாசனம் : திருமங்கையாழ்வார் 1 பாசுரம்

விசேடம் : இக்கோயிலில் கல்வெட்டுக்கள் பல உள்ளன.

4. **அண்டரெலாம் போற்றும் அழகிய வல்லிமேவும்**
**புண்டரிகன் அன்பில் புயங்கமிசை -கண்டுயில்வோன்**
**வண்டுளவத் தாரான் வடிவழகு நம்பியெனும்**
**விண்டுவின் நாமம் விளம்பு.**

புயங்கம் - பாம்பு, விளம்பு - சொல்லு

## 5. திருக்கரம்பனூர்

இத்தலம் உத்தமர் கோயில் எனவும் வழங்கப்பெறும். திருச்சியிலிருந்து 8 கி.மீ தொலைவிலும் ஸ்ரீ ரங்கத்திலிருந்து வடக்கே 3 கி.மீ. தூரத்திலும் உள்ளது. திருவெள்ளறை போகும் பஸ் வழியில் இங்கு இறங்கலாம்.

மூலவர் : புருஷோத்தமன், புஜங்கசயனம், கிழக்கே திருமுக மண்டலம்.

தாயார் : பூர்வாதேவி, பூர்ணவல்லி

தீர்த்தம் : கதம்ப தீர்த்தம்

ஸ்தலவிருஷம் : கதலீ. [வாழை மரம்]

விமானம் : உத்யோக விமானம்

பிரத்யக்ஷம் : கதம்பமுனி, ஸநத்குமாரர்கள்

விசேடம் : இங்கு சிவபெருமான் கையில் ஒட்டிக்கொண்டிருந்த பிரம்ம கபாலத்தை நீக்கி சிவனுடைய சாபத்தை தீர்த்ததாக வரலாறு.

மங்களாசாசனம் : திருமங்கையாழ்வார் – 1 பாசுரம்

5. **காரணி வண்ணன் கரம்பனூர் கண்வளர்வோன்**
**பூரணவல் லிக்கினியன் பூந்துளவத் -தாரணிவோன்**
**கண்ணுதலான் சாபம் களைந்த புரு டோத்தமன்தாள்**
**என்னுமவர்க் (கு) இல்லை இடர்.**

**நுதல் - நெற்றி. கண்ணுதலான் - நெற்றியில் ஓர் கண்ணையுடையவன். சிவபெருமான்**

## 6. திருவெள்ளறை

திருச்சியிலிருந்து துறையூர் போகும் பஸ் மார்க்கத்தில் சுமார் 20 கி.மீ. தூரத்தில் உள்ளது. ஸ்ரீ ரங்கத்திலிருந்து உத்தமர் கோயில் (கரம்பனூர்) வழியாகவும் போகலாம். பஸ்பாதையிலிருந்து சுமார் 1/2 கி.மீ. தூரத்தில் உள்ளது.

மூலவர் : புண்டரீகாட்சன், செந்தாமரைக்கண்ணன் [நின்ற திருக்கோலம்] கிழக்கே திருமுக மண்டலம்.

தாயார் : செண்பகவல்லி, பங்கயச்செல்வி தனிச்சந்நிதி உண்டு.

உத்ஸவத்தாயார்: பங்கஜவல்லி

தீர்த்தம் : மதிலுக்குள்ளேயே 7 தீர்த்தங்கள் உள்ளன. திவ்யகந்த புஷ்கரணி, குச, சக்ர, புஷ்கல, பத்ம, வராக, மணி கர்ணிகா

விமானம் : விமலாக்ருதி விமானம்.

விசேடம் : வெள்ளறை - வெள்ளை நிறமுடைய பாறை என்பதாகும். உத்தராயண வாசல் தக்ஷிணாயனவாசல் என 2 வாசல்கள் உள்ளன. இத்தலத்தின் சகல ஆதித்யமும் பங்கயச் செல்வியினுடையதே.

பிரத்யக்ஷம் : கருடன், சிபி, மார்கண்டேயர்

மங்களாசாசனம் : பெரியாழ்வார் 12 பாசுரங்கள், திருமங்கையாழ்வார் 12 பாசுரங்கள்.

6. புள்ளரையன் மீதூரும் புண்டரீ காட்ச! திரு
வெள்ளறையில் நின்றருள் வித்தகா! யென்-
உள்ளுறைவாய்
பங்கயச் செலவிமன்னும் பைம்பொன் அணிமார்பா!
பங்கயக்கண் மாலே பரிந்து.

புள்ளரையன் - கருடன்
பங்கயம் - தாமரை, அணி - அழகிய

## 7. திருப்புள்ளம்பூதங்குடி

கும்பகோணத்திலிருந்து சுவாமிமலைவழியாக திருவைகாவூர் செல்லும் டவுன் பஸ்மார்க்கத்தில் சுவாமி மலைக்கப்பால் 5 கி.மீ. தொலைவில் உள்ளது. திருஆதனூர் என்ற தலம் சமீபத்திலேயே உள்ளது.

மூலவர் : வல்வில் ராமன். புஜங்க சயனம்
கிழக்கே திருமுக மண்டலம்
தாயார் : பொற்றாமரையாள், [ஹேமாம் புஜவல்லி]
தீர்த்தம் : ஜடாயு தீர்த்தம்
விமானம் : சோபன விமானம்
பிரத்யக்ஷம் : சக்ரவர்த்தித்திருமகன், கிருத்ரராஜன்
விசேடம் : ஸ்ரீராமன் ஜடாயுவுக்கு மோட்சமளித்த பின் சிரமப்பரிஹாரம் செய்துகொள்ளும் நிலையில் கோயில் கொண்டதாகக் கூறப்படுகிறது.
மங்களாசாசனம் : திருமங்கையாழ்வார் 10 பாசுரங்கள்.

7. புள்ளுக்கு முத்திதந்தோன் புள்ளம்பூ தங்குடியான்
வள்ளல்வல் வில்லிராமன் வானேத்தும்-தெள்ளமுதன்
பொற்றா மரையாள்தன் பூமான் புயங்கணையன்
நற்றாள் தொழுதேத்தல் நன்று.

புள் - பறவை (ஜடாயு என்ற கழுகு)
பூமான் - கணவன், புயங்கம் - பாம்பு

## 8. திருப்பேர்நகர் (கோயிலடி)

திருப்பேர்நகரென்ற " கோயிலடி" திருச்சியிலிருந்து 24 கி.மீ. தொலைவில் உள்ளது. அன்பிலில் இருந்து கொள்ளிடத்திற்கு மறுகரையில் 5.கி.மீ தூரத்தில் உள்ளது. தஞ்சாவூர், கும்பகோணத்திலிருந்து திருவையாறு வழியாகவும் போகலாம். " கோயிலடி" என்றால்தான் யாருக்கும் தெரியும்.

மூலவர் : அப்பக்குடத்தான்,
அப்பாலாரங்கநாதன், புஜங்கசயனம்,
மேற்கே திருமுகமண்டலம்

தாயார் : இந்திராதேவி, கமலவல்லி

தீர்த்தம் : இந்திரா தீர்த்தம், கொள்ளிடம்

ஸ்தலவிருட்சம் : வில்வம்

விமானம் : இந்திர விமானம்

பிரத்யக்ஷம் : உபமன்யு, பராசரர்

விசேடம் : பெருமாளுக்கு தினமும் மாலையில் அரவணையாக அப்பம் அமுது செய்விக் கப்படுகிறது. மூலவர் அருகில் அமர்ந்திருக்கும் உபமன்யு முனிவருக்கு ஆசிகூறும் பெருமாளின் வலது திருக்கரம் ஓர் அப்பக்குடத்தையும் அணைத்திருக்கிறது.

மங்களாசாசனம் : [1] பெரியாழ்வார் 2 பாசுரங்கள்
[2] திருமங்கையாழ்வார் 19 பாசுரங்கள்
[3] திருமழிசையாழ்வார் 1பாசுரம்
[4] நம்மாழ்வார் 11பாசுரங்கள்

8. **அஞ்சன வண்ணன் அணிதிருப் பேர்நகர்வாழ்**
**கஞ்சமலர்க் கண்ணன் கமலவல்லி-நெஞ்சுறையும்**
**அப்பக் குடத்தான் அரவணையன் நாமங்கள்**
**செப்புவார்க் கென்றும் சிறப்பு.**

## 9. திரு ஆதனூர்

இத்தலம் சுவாமி மலையிலிருந்து 3 கி.மீ. தூரத்தில் உள்ளது. இத்தலத்தை சேவிக்கும்போது இதன் சமீபத்திலுள்ள திருப்புள்ளம் பூதங்குடியையும் சேவிக்கலாம்.

மூலவர் : ஆண்டளக்குமையன், [புஜங்கசயனம்] கிழக்கே திருமுக மண்டலம்.பெருமாளின் தலையின் கீழ் மரக்காலும் இடது கையில் ஓலையும் எழுத்தாணியும் உள்ளன.

தாயார் : ரங்கநாயகி

தீர்த்தம் : சூர்யபுஷ்கரணி

விமானம் : பிரணவ விமானம்

விசேடம் : பெருமாளின் பாதார விந்தங்களில் திருமங்கை யாழ்வாரும் காமதேனுவும் உள்ளனர்.

மங்களாசாசனம் : திருமங்கையாழ்வார் 1 பாசுரம்

9. **ஞாலம் புகழரங்க நாயகிதன் கேள்வனவன்**
**ஞாலமேழும் உண்டுமிழ்ந்த நாரணன்-ஞாலமுய்ய**
**ஆதனூர் கண்வளர்ந்து ஆண்டளுக்கும் ஐயன்தன்**
**பாதங்கள் யாமுடைய பற்று.**

யாமுடைய பற்று = நமக்கு புகலிடமாகும்

## 10. திருவழுந்தூர் (தேரழுந்தூர்)

இவ்வூர் மாயவரத்திலருந்து தென்மேற்கே 21 கி.மீ. தூரத்தில் உள்ளது.

மூலவர் : தேவாதிராஜன் [நின்ற திருக்கோலம்]

உத்ஸவர் : உபயநாச்சியாருடன் ஆமருவியப்பன்

தாயார் : செங்கமலவல்லி.

தீர்த்தம் : தர்சன புஷ்கரணி, காவேரி

விமானம் : கருட விமானம்

விசேடம் : கம்பர் அவதாரஸ்தலம். இப்பெருமாளை வழிபட்டு பேறு பெற்றவர்கள்; தருமதேவதை, உபரிசரவசு,

கருடன், காவேரி, அகத்தியர் ஆகியோராவர். பெருமாள் ருக்மணி,சத்யபாமை பசுங்கன்றுடனும் கிருஷ்ணனாக காட்சிதருகிறார். மேலும் மூலவரின் வலதுபுறம் பிரகலாத ஆழ்வாரும், இடதுபுறம் கருடாழ்வாரும் உள்ளனர். காவிரித்தாய் பெருமாளின் இடதுபுறம் மண்டியிட்டு சேவித்துக்கொண்டிருக்கிறாள். திருமங்கையாழ்வார் 45 பாசுரங்கள் பாடியுள்ளார்.

10. **செங்கமல வல்லிமேவும் தேவாதி தேவனை**
**செங்கமலக் கண்ணன் செகமளந்த -புங்கவனை**
**ஆமருவி யப்பன் அணியழுந்தூர் நின்றானை**
**நாமருவி யேத்தல் நலம்.**

மருவுதல் - தியானித்தல்

## 11. திருச்சிறுபுலியூர்

இவ்வூர் மாயவரம்-அறந்தாங்கி ரயில் மார்க்கத்தில் கொல்லுமாங்குடி ஸ்டேஷனிலிருந்து 3 கி.மீ. தூரத்தில் உள்ளது. மாயவரத்திலிருந்து டவுன் பஸ்ஸில் செல்லாம்.

மூலவர் : அருள்மாகடல், சலசயனப்பெருமாள் [புஜங்க சயனம்], தெற்குபக்கம் நோக்கிய நிலை

உத்ஸவர் : க்ருபா ஸமுத்திரப்பெருமாள் [அருள்மாகடல்]

தாயார் : திருமாமகள் நாச்சியார்

உத்ஸவர் : தயாநாயகி

விமானம் : நந்தவர்த்தன விமானம்

தீர்த்தம் : மானசபுஷ்கரணி, அனந்தசரஸ்

விசேடம் : புயங்க சயனத்திலேயே மிகச்சிறிய திருவுருவம் இது. அனந்தனுக்கு [ஆதிசேஷன்] கருடனிட மிருந்து அபயமளித்த தலம்.

பேறுபெற்றவர்கள் : வியாசரும், வியாக்ரபாதருமாவர்.

மங்களாசாசனம் : திருமங்கையாழ்வாரால் பாடல் பெற்றதலம். 10 பாசுரங்கள்.

11. அருள்மா கடலென்னும் ஆரமுதன் என்றும்
திருமா மகளுறையும் சீரார் -திருமார்பன்
ஏரார் சிறுபுலியூர் எந்தை சலசயனன்
காரார் முல்வணனே காப்பு.

வழு-தவறு, கேடு, பாவம், குற்றம்

## 12. திருச்சேறை (பஞ்சசார க்ஷேத்திரம்)

கும்பகோணத்திலிருந்து தென்கிழக்கில் சுமார் 15 கி.மீ. தூரத்திலும் நாச்சியார் கோயிலிருந்து 4 கி.மீ. தொலைவிலும் உள்ளது.

மூலவர் : சாரநாதன் [நின்ற திருக்கோலம்]
கிழக்கு திசை நோக்கிய நிலை.

உத்ஸவர் : மாமதலைப் பிரான். [தவழும் திருக்கோலம்]

தாயார் : சாரநாயகி [சார நாச்சியார்], பஞ்சலட்சுமி

தீர்த்தம் : சாரபுஷ்கரணி

விசேடம் : மூலவர், தாயார், தீர்த்தம், க்ஷேத்திரம், விமானம். இவை ஐந்தும் ஸாரமுள்ளதால் இத்தலத்திற்கு பஞ்சசார க்ஷேத்திரம் என்ற பெயர்பெற்றது.காவிரியும் மார்கண்டயேரும் சேவித்து பயன்பெற்றனர்.திருமங்கை யாழ்வாரால் 13 பாசுரங்களால் மங்களாசாசனம்.

12. தாரணியோர் தாமுய்ய தண்சேறை நின்றபிரான்
தாரணியும் பூமார்பன் தஞ்சமருள்-நாரணன்
சாரநாச்சி தங்கேள்வன் சார விமானத்தன்
சாரநாதன் தானே சரண்.

## 13. திருத்தலைச்சங்கநாண் மதியம்

தற்போது தலைச்சங்காடு என்று அழைக்கப்படும் இத்தலத்திற்கு மாயவரத்திலிருந்து ஆக்கூர் போய் அங்கிருந்து சீர்காழி செல்லும் பாதையில் 2 கி.மீ. தூரம் சென்று சேரலாம். மாயவரம், சீர்காழியிலிருந்து டவுன் பஸ் செல்கிறது.

மூலவர் : நாண்மதியப் பெருமாள், வெண்சுடர்ப்பெருமாள் [நின்ற கோலம்] கிழக்கு நோக்கிய பார்வை.

உத்ஸவர் : வியோமஜோதிப் பிரான், வெஞ்சுடர்ப்பிரான், லோகநாதன்

தாயார் : தலைச்சங்க நாச்சியார்

உத்ஸவர் : செங்கமல வல்லித்தாயார்

தீர்த்தம் : சந்திரபுஷ்கரணி

விமானம் : சந்திரவிமானம்

பேறுபெற்றோர் : சந்திரன், தேவப் பிருந்தங்கர் நித்திய சூரிகள்

விசேடம் : சந்திரனின் சாபம் தீர்த்த தலம். திருமங்கையாழ்வார் 2 பாசுரங்களால் மங்களாசாசனம்

13. **தலைச்சங்க நாயகிதோய் தண்டுளவ மார்பன்**
**தலைச்சங்க நாண்மதியன் தண்ணார் -அலைவண்ணன்**
**வெண்சுட ரம்மான் வினையகற்றும் மாலவனாம்**
**ஒண்சுட ராழியான் பேர் ஒது.**

தோய் - தோய்தல் - அணைதல், உறைதல்
ஆழியான் - திருமால்,
ஒண்சுடர் - மிகுந்த ஒளிவீசுகின்ற

## 14. திருக்குடந்தை

தஞ்சை மாவட்டத்தில் உள்ளத குடந்தை என்ற கும்பகோணம். இங்கு உள்ள சக்கரபாணிக்கோயில் பேருந்து நிலையத்திலிருந்து 1 கி.மீ. தூரத்தில் உள்ளது.

மூலவர் : சாரங்கபாணி, [கிடந்த கோலத்தில் உத்தானசயனம்] கிழக்கு திசை நோக்கிய சேவை. இவருக்கு ஆராவமுதன், உத்தானசாயி என்ற பெயரும் உண்டு.

தாயார் : கோமளவல்லி [படிதாண்டாப்பத்தினி]

விசேடம் : அமிர்த கும்பம் [குடம்] தங்கியதலம். இங்குதான் ஸ்ரீமந்நாத முனிகள் "ஆராவமுதே என்ற திருவாய்மொழியைக் கேட்டு திவ்யப் பிரபந்தத்தை தொகுக்க ஆரம்பித்தார். ஹேமமகிரிஷிக்குச் சேவை சாதித்தார்.

மங்களாசாசனம் : பெரியாழ்வார் 3 பாசுரங்கள், ஆண்டாள் 1 பாசுரம் திருமழிசையாழ்வார் 7 பாசுரங்கள், திருமங்கையாழ்வார் 25 பாசுரங்கள், பூதத்தாழ்வார் 2; பேயாழ்வார் 2, நம்மாழ்வார் 11 பாசுரங்கள், மொத்தம் 51 பாசுரங்கள்.

14. **சீரார் திருக்குடந்தை செங்கண்மால் சாரங்கன்**
**ஆரா வமுதன் அரவணையன்-ஏராரும்**
**கோமளவல் லிக்கொழுநன் குற்றங் களைந்தருளும்**
**சாமளனே நந்தமக்கு சார்வு.**

அரவணையன்-பாம்பின்மேல் பள்ளி கொண்டவன்
கொழுநன்-கணவன்,சாமளன்-பச்சைவண்ணன் திருமால்.

## 15. திருக்கண்டியூர்

இத்தலம் தஞ்சையிலிருந்து வடக்கே திருவையாறு செல்லும் மார்க்கத்தில் சுமார் 6 கி.மீ தூரத்திலும் திருவையாற்றிலிருந்து 2 கி.மீ. தூரத்திலும் உள்ளது.

மூலவர் : அரசாபவிமோசனப்பெருமாள் [நின்ற திருக்கோலம்]. கிழக்குதிசை நோக்கி சேவை சாதிக்கிறார்.

உத்ஸவர் : கமலநாதன்

தாயார் : கமலவல்லி

தீர்த்தம் : கபால மோக்ஷபுஷ்கரணி பத்மதீர்த்தம் கபாலதீர்த்தம், குடமுருட்டி நதி

விமானம் : கமலாக்ருதி விமானம்

விசேடம் : பரமசிவன் கையில் ஒட்டியிருந்த

பிரம்மகபாலத்தை நீக்கி சாபவிமோசனம் செய்த பெருமாள். திருக்கரமபனூரிலும் இதே வரலாறு உள்ளது. அகத்தியருக்கு சேவை சாதித்தார். திருமங்கையாழ்வாரால் மங்களாசாசனம் 1 பாசுரம்.

15. ஆழியங் கையன் அரன்சாபம் தீர்த்தபிரான்
ஊழி முதல்வன் உலகளந்த -ஆழிவணன்
கண்டியூர் நின்றான் கமலவல்லி கேள்வனவன்
அண்டியவர்க் கெல்லாம் அரண்.

அரன்-சிவன். ஆழி-சக்கரம், கடல். அரண்-பாதுகாப்பு

## 16. திருவிண்ணகர் (ஒப்பிலியப்பன்கோயில்) (திருநாகேஸ்வரம்)

இக்கோயில் கும்பகோணத்திலிருந்து 6 கி.மீ தொலைவில் உள்ளது. நாகேஸ்வரம் ரயில் நிலையத்திலிருந்து சுமார் 1.கி.மீ. தூரம்.

மூலவர் : ஒப்பிலியப்பன் [ஒப்பற்றவன்]
ஸ்ரீ நிவாசன், [நின்ற திருக்கோலம்]

தாயார் : பூமிதேவி [பெருமாளுக்கு வலது புறம்]
கீழே மண்டியிட்டு வணங்கிய நிலை.
தனிக்கோயில் இல்லை.

தீர்த்தம் : அகோராத்ர புஷ்கரணி, சாரங்கதீர்த்தம், சூரிய, இந்திர, பிரம்ம தீர்த்தங்கள்.

விமானம் : விஷ்ணு விமானம், சுத்தானந்த விமானம்

விசேடம் : திருப்பதிஸ்ரீநிவாசனுக்குத்தமையன் என்ற ஐதீகம். இப்பெருமாளுக்கு தளுகையில் உப்பு சேர்ப்ப தில்லை.தென்திருப்பதி என்றும் பெயர். மார்க்கண்டேயர் கருடன், காவேரி, தர்மதேவதைகளுக்கு சேவை சாதித்த பெருமாள்.

மங்களாசாசனம்: திருமங்கையாழ்வார் 34 பாசுரங்கள், பேயாழ்வார் 2 பாசுரங்கள், நம்மாழ்வார் 11 பாசுரங்கள்.

16. **வேதங்க ளேத்துதிரு விண்ணகர் மேயவனை**
**பூதேவி தாமருவும் பூவணனை -பூதங்கள்**
**அப்பெரி காலொடுபார் அண்டமென நின்றருளும்**
**ஒப்பிலி யப்பன்பேர் ஓது.**

அப்பு-நீர், எரி-நெருப்பு, கால்-காற்று, பார்-பூமி அண்டம்-ஆகாயம், (ஐம்பூதங்கள்) பஞ்சபூதங்கள்

## 17. திருக்கண்ணபுரம்

நாகப்பட்டினத்திலிருந்து நன்னிலம் போகும் பஸ்ஸில் திருப்புகலூர் என்ற இடத்தில் இறங்கி சுமார் 2 கி.மீ. தூரம் சென்றால் இத்தலத்தை அடையலாம்.

| | | |
|---|---|---|
| மூலவர் | : | நீலமேகப்பெருமாள், சௌரிராஜன் கிழக்கு நோக்கி நின்ற திருக்கோலம். |
| உத்ஸவர் | : | சௌரிராஜப்பெருமாள் |
| தாயார் | : | கண்ணபுரநாயகி. தனிக்கோயில் |
| தீர்த்தம் | : | நித்யபுஷ்கரணி |
| விமானம் | : | உத்பலாவதக விமானம் |
| விசேடம் | : | ஸ்ரீ தேவி, பூதேவி, ஆண்டாள், பத்மினி ஆகியவர்கள் தாயாராக உள்ளனர். கண்வர், தண்டக முனிவர்கள், கருடன் ஆகியோருக்கு பிரத்யட்சமானவர். |

மங்களாசாசனம் : பெரியாழ்வார் 1 பாசுரம். ஆண்டாள் 1 பாசுரம், குலசேகராழ்வார் 11 பாசுரங்கள், திருமங்கையாழ் வர் 104 பாசுரங்கள், நம்மாழ்வார் 11 பாசுரங்கள். ஆக 128 பாசுரங்கள் . இத்தலம் பஞ்ச கிருஷ்ண தலங்களுள் ஒன்று. திருமங்கையாழ் வாருக்குத் திருமந்திர உபதேசம் செய்யப்பட்ட தலம்.

17. **நீலமேக னென்னும் நெடியோனாம் சௌரிராசன்**
**ஞாலமேழும் உண்டுமிழ்ந்த நாரணன் - ஞாலமேத்தும்**
**கண்ணபுரம் நின்றான் கணபுரத்தாள் கேள்வனிம்**
**மண்ணவரு முய்ய மகிழ்ந்து.**

நெடியோன் - திருமால்.

## 18. திருவாலி-திருநகரி

**(i) திருவாலி** :- இது சீர்காழி - திருவெண்காடு பஸ் மார்க்கத்தில் 6 கி.மீ. தென்கிழக்கே உள்ளது.

**(ii) திருநகரி** :- இது சீர்காழியிலிருந்து சுமார் 7 கி.மீ. கிழக்கில் உள்ளது. இந்த இரண்டு தலங்களும் சேர்ந்து ஒரே திவ்யதேசமாக கருதப்படுகிறது.

**(i) திருவாலி** :-

மூலவர் : லட்சுமி நரசிம்மர், வயலாளி மணவாளன் [வீற்றிருந்த நிலை.] கிழக்கு நோக்கி சேவை.

உத்ஸவர் : திருவாலிநகராளன்

தாயார் : அமிர்தகடவல்லி

தீர்த்தம் : இலாட்சணிபுஷ்கரணி

விமானம் : அஷ்டாக்ஷரவிமானம் [திருமங்கையாழ்வாருக்கு சேவை தந்தவர்.]

**(ii) திருநகரி** :-

மூலவர் : வேதராஜன் [வயலாளி மணவாளன் வீற்றிருந்த கோலம். மேற்கே நோக்கிய பார்வை.

உத்ஸவர் : கல்யாண ரங்கநாதன்

தாயார் : அமிர்தவல்லி

விசேடம் : திருமங்கையாழ்வார் ஆராதித்தம் 5 நரசிம்மர்களில் 2 மூர்த்திகள் இங்கே உள்ளனர். இங்குதான் பெருமாளிடம் வாள் வலியால் மந்திரம் கொண்டார். குலசேகராழ்வார். 1 பாசுரம். திருமங்கையாழ்வார் 41 பாசுரங்கள் மங்களாசாசனம்.

18. **அமுதகட வல்லிமேவும் ஆலிநக ராளன்**
**அமுதம் கடைந்தன்று அண்டர்க் -கமுதளித்தோன்**
**வாட்கலிய னேத்தும் வயலா ளிமணவாளன்**
**தாட்கடிமை யாதல் தலை.**

**வாட்கலியன் - வாளைக்காட்டி திருமாலிடம் திருமந்திரத்தை பெற்ற திருமங்கையாழ்வார்.**

## 19. திருநாகை (நாகப்பட்டினம்)

மாயவரத்திலிருந்து நாகப்பட்டினம் என்ற இத்தலத்திற்கு பஸ்ஸில் வந்து சேரலாம். நாகை பேருந்து நிலையத்திற்கு எதிர் தெருவிலேயே பெருமாள் கோயில் உள்ளது.

மூலவர் : நீலமேகப்பெருமாள், [கதையுடன் நின்ற திருக்கோலம்] கிழக்கு திசை நோக்கி சேவை சாதிக்கிறார்.

உத்ஸவர் : சௌந்தர்யராஜன்

தாயார் : சௌந்தர்யவல்லி

தீர்த்தம் : சாரபுஷ்கரணி.

விமானம் : சௌந்தர்யவிமானம்

தலமரம் : மாமரம்

விசேடம் : நாகராஜனுக்கு காட்சி தந்த தலம். திருமங்கையாழ்வார் பிரம்மாதிகளுக்கும் சேசையளித்த தலம். திருமங்கையாழ்வாரால் 10 பாசுரங்களால் பாடல் பெற்ற தலம்.

19. **ஞாலமுய்ய நண்ணிதிரு நாகைப் பதிநின்றான்**
**நீலமே கப்பெருமான் நீண்முடியெம்-மாலழகன்**
**சௌந்தர்ய வல்லிக்கோன் சங்காழி தண்டேந்தும்**
**சௌந்தர்ய ராசன்சீர் சாற்று.**

சாற்று- சொல்லு.

## 20. திருநறையூர் (நாச்சியார் கோயில்)

இத்தலம் கும்பகோணத்திலிருந்து தென்கிழக்கே சுமார் 10 கி.மீ. தொலைவில் உள்ளது.

மூலவர் : ஸ்ரீநிவாசன், திருநறையூர் நம்பி, வாசுதேவன் [திருமண கோலத்தில் நின்ற திருக்கோலம்] கிழக்கு நோக்கிய திருமுகம்.

தாயார் : வஞ்ஜுளவல்லி, நம்பிக்கை நாச்சியார், [பெருமாள், பக்கத்தில் திருமணக் கோலத்தில் நிற்கிறார்.]

தீர்த்தம் : மணிமுக்தா புஷ்பகரணி சங்கர்ஷண தீர்த்தம் பிரத்யும்ன, அநிருத்த, சாம்ப தீர்த்தங்கள்.

விமானம் : ஸ்ரீநிவாச விமானம், ஹேம விமானம்,

தலமரம் : மகிழமரம்.

விசேடம் : கோயில் கருவறையில் தாயாரும் மற்றும் சங்கர்ஷண, அநிருத்தன், பிரத்யுனன், புருஷோத்தமன், நான் முகனும் உள்ளனர். மேதாவிமுனிவருக்கு சேவை தந்த தலம். இங்கு கல்கருட சேவை பெயர் பெற்றது. திருமங்கையாழ்வாரால் மங்களாசாசனம் 110 பாசுரங்கள்.

இக்கோயிலில் 108 திவ்யதேச பெருமாளின் விக்கிரகங்கள் உள்ளன.

20. **தெள்ளியார் போற்றும் திருநறையூர் நின்றநம்பி**
**புள்ளினையூர் மாலே! புயல்வண்ணா! -தெள்ளமுதே!**
**வஞ்சுளவல் லிக்கினிய வாசுதேவா! வந்தெனது**
**நெஞ்சுளே என்றும் நீ நில்.**

புயல்-மேகம் தெள்ளியார் தெளிந்த அறிவுடையவர்கள்.

## 21. திருநந்திபுரவிண்ணகரம் (நாதன் கோயில்)

நாதன் கோயில் என்ற இத்தலம் கும்பகோணத்திலிருந்து தென்மேற்கே சுமார் 5 கி.மீ. தூரத்தில் உள்ளது. கும்பகோணத்திலிருந்து பஸ்ஸில் கொருக்கை என்ற ஊருக்கு வந்து அங்கிருந்து 2 கி.மீ. தூரம் செல்ல வேண்டும்.

மூலவர் : ஜகந்நாதன், நாதநாதன், விண்ணகரப் பெருமாள், ஸ்ரீநிவாசன் [வீற்றிருக்கும் நிலை] மேற்குநோக்கிய சேவை.

தாயார் : செண்பகவல்லித் தாயார்

விமானம் : மந்தார விமானம்

தீர்த்தம் : நந்திபுஷ்கரணி

பேறு பெற்றோர் : நந்தி, சிபிசக்ரவர்த்தி, மார்க்கண்டேயர்.

விசேடம் : நந்தி சாபவிமோசனம் பெற்ற தலம். இதனால் பெருமாளுக்கு நந்தி நாதன் என்ற பெயரும்,

ஊருக்கு நந்தி புரமென்றும் வழங்கப்படுகிறது. இப்பெருமாளை திருமங்கையாழ்வார் 10 பாசுரங்களால் மங்களாசாசனம் செய்துள்ளார்.

21. **நந்திபுர விண்ணகரம் நண்ணி யமர்ந்தபிரான்**
**நந்திசாபம் தீர்த்தசெக நாதனவன்-சந்தமிகு**
**செண்பக வல்லி திகழும் திருமார்பன்**
**ஒண்கழலை நெஞ்சேநீ உன்னு.**

சந்தம் - அழகு

## 22. திரு இந்தளூர்

இது மாயவரம் நகராட்சியிலேயே ஒரு பகுதி. நகரின் வடகிழக்கு மூலையில் காவிரியாற்றைக் கடந்து செல்ல வேண்டும். டவுன் பஸ்ஸில் செல்லலாம்.

மூலவர் : பரிமளரங்கநாதன், மருவினிய மைந்தன், சுகந்தவனநாதன். [வீரசயனம்] கிழக்கு நோக்கிய முகம்.

தாயார் : பரிமளரங்கநாயகி, புண்டரீக வல்லி, சந்திரவிமோசன வல்லி.

விமானம் : வேத சக்ரவிமானம்

தீர்த்தம் : இந்து புஷ்கரணி.

விசேடம் : இந்து என்றால் சந்திரன். சந்திரன் சாப விமோசனம் பெற்றதலமாதலால் இதற்கு இந்தளூர் என்ற பெயர் வந்தது. மூலவருக்கு 4 புஜங்கள் உள்ளன. தலைமாட்டில் காவேரித்தாயும் கால்மாட்டில் கங்கைத்தாயும் அமர்ந்துள்ளனர். இத்தலப்பெருமாளை திருமங்கையாழ்வார் 11 பாசுரங்களால் பாடியுள்ளார்.

22. **பைந்துளவ மார்பா! பரிமள ரங்கநாதா!**
**இந்தளூர் கண்வளரும் எம்பிரானே!-எந்தாய்!**
**மருவினிய மைந்தா! மனமிரங்கி எந்தன்**
**அருவினையை நீக்கி அருள்.**

அருவினை-கொடிய வினைகள்

## 23. திருச்சித்ரகூடம் (சிதம்பரம்)

இத்தலம் சிதம்பரம் தில்லை நடராஜர் கோயிலுக்குள் உள்ளது. பல ஊர்களிலிருந்து பஸ்வசதிகள் உண்டு.

மூலவர் : கோவிந்தராஜன் [போக சயனம்] கிழக்கு நோக்கிய முகம்.

உத்ஸவர் : தேவாதிதேவன், பார்த்தசாரதி சித்திரகூடத்துள்ளான்.

தாயார் : புண்டரீகவல்லி [தனிக்கோயில்]

தீர்த்தம் : புண்டரீகபுஷ்கரணி.

விமானம் : சாத்விக விமானம்

பேறுபெற்றோர் : தில்லை மூவாயிரவர், கண்வர், பதஞ்சலி, வியாக்ரபாத முனிவர்.

விசேடம் : இச்சந்நிதி நடராஜர் கோயிலுக்குள் இருந்தாலும் தனிக்கோயிலுக்குண்டான சகல அம்சங்களுடன் அமைந்துள்ளது.

மங்களாசாசனம் : குலசேகராழ்வார் 11 பாசுரங்கள், திருமங்கையாழ்வார் 21 பாசுரங்கள். மொத்தம் 32 பாசுரங்கள்.

23. **புண்டரீக வல்லிமேவும் பூமான்கோ விந்தராசன்**
**அண்டரெலாம் போற்றும அரவணையன் -மண்டுபுகழ்**
**தேவாதி தேவன் திருச்சித்ர கூடனையே**
**நாவால் நவின்றேத்தல் நன்று.**

பூமான்-கணவன், நவிலுதல்-சொல்லுதல்.

## 24. திருக்காழிச்சீராமவிண்ணகரம் (சீர்காழி)

இச்சந்நிதி சீர்காழி நகரிலேயே உள்ளது. சென்னை முதலிய பெரிய நகரங்களிலிருந்து பஸ்வசதி உண்டு.

மூலவர் : திரிவிக்கிரமன், தாடாளன். [உலகளந்த திருவுருவம் நின்றதிருக்கோலம். கிழக்கே திருமுகம்.]

உத்ஸவர் : திரிவிக்ரம நாராயணன்

தாயார் : மூலவர், லோகநாயகி

உத்ஸவர் : மட்டவிழ் குழலி.

தீர்த்தம் : சங்கபுஷ்கரணி, சக்ரதீர்த்தம்

விமானம் : புஷ்கலாவர்த்த விமானம்.

விசேடம் : திருமங்கையாழ்வார் ஞானசம்பந்தரை வாதில்வென்று நாலுகவிப்பெருமாள் என்ற விருதைப் பெற்ற தலம்.

மங்களாசாசனம் : திருமங்கையாழ்வார் 10 பாசுரங்கள்

24. **ஞாலம் புகழுலக நாயகிமன் தாடளன்**
**ஞாலமேழும் நீண்டளந்த நாரணன் -ஞாலமுண்டோன்**
**தெள்ளியர் வாழ்காழிச் சீராம விண்ணகரான்**
**உள்ளுநரைக் காப்பான் உகந்து.**

தெள்ளியர்-தெளிந்த அறிவுடையவர்கள்
உள்ளுநர் - தன்னை என்றும் நினைப்பவர்கள்

## 25. திருக்கூடலூர் (ஆடுதுறைப்பெருமாள்கோயில்)

இத்தலம் தஞ்சையை அடுத்த அய்யம்பேட்டையிலிருந்து 6 கி.மீ. தொலைவில் உள்ளது. திருவையாறிலிருந்து கும்பகோணம் செல்லும் பஸ்ஸில் சென்றால் 11 கி.மீ. தூரத்திலுள்ள இத்தலத்தை அடையலாம். தஞ்சாவூர் - கணபதி அக்ரஹாரம் டவுன் பஸ்ஸிலும் செல்லலாம்.

மூலவர் : வையங்காத்த பெருமாள் [ஜகத்ரக்ஷகன்] உய்ய வந்தார். [நின்ற திருக்கோலம்]

உத்ஸவர் : அதே பெயருடன் கையில் செங்கோல் தாங்கி நிற்கிறார்.

தாயார் : பத்மாஸனி, புஷ்பவல்லி

தீர்த்தம் : சக்ரதீர்த்தம், காவிரி நதி

விமானம் : சுத்தசத்துவ விமானம்

விசேடம் : இங்கே தேவர்கள் நந்தக முனிவரோடு சேவிக்கவந்ததனால் இத்தலத்திற்கு கூடலூர் என்ற பெயர் வந்தது.திருமங்கையாழ்வாரால் 10 பாசுரங்களால் பாடல் பெற்றவர்.

**26. வையம் படைத்தந்த வையத்தைக் காத்தபிரான்**
**வையத்துட் கூடலூர் வந்துநின்ற-ஐயனவன்**
**பாராய துண்டுமிழ்ந்தோன் பத்மா சநிகேள்வன்**
**காராய வண்ணனே காப்பு.**

## 26. திருக்கண்ணங்குடி (கிருஷ்ரண்யக்ஷேத்ரம்)

நாகப்பட்டினம் சிக்கல் (அ) கிவளூர் பஸ்ஸில் ஆழியூரில் இறங்கி 1 கி.மீ. தூரம் சென்றால் இத்தலத்தை அடையலாம்.

மூலவர் : லோகநாதன், சியாமளமேனிப்பெருமாள் நின்ற திருக்கோலம் கிழக்கு நோக்கிய திருமுகம்.
உத்ஸவர் : தாமோதர நாராயணன்
தாயார் : லோகநாயகி [தனிக்கோயில்]
உத்ஸவர் : அரவிந்த வல்லி.
விமானம் : உத்பல விமானம்
தீர்த்தம் : சிரவணபுஷ்கரணி
தலமரம் : மகிழமரம்
விசேடம் : தாயார் சந்நிதியில் மூலவரும் உத்ஸவரும் ஒரே முகஜாடையில் உள்ளனர்.
மங்களாசாசனம் : திருமங்கையாழ்வார் 10 பாசுரங்கள்.

**26. ஆழிவலம் கொண்டோன் அரவிந்த வல்லிகேள்வன்**
**ஊழி முதல்வன் உலகநாதன்-கேழொளிரும்**
**தண்ணந் துழாய்முடியன் சாமள மேனியனைக்**
**கண்ணங் குடிசென்று காண்.**

கேழ்-நிறம் சாமளம்-பசுமை
கேழொளிர்-ஈடுஇிணையில்லாத ஒளிமிகுந்த

## 27. திருக்கண்ணமங்கை

(கிருஷ்ணாரண்யக்ஷேத்ரம்) (சப்தாம்ருத க்ஷேத்திரம்)

இத்தலம் கும்பகோணம் திருவாரூர் சாலையில் திருவாரூரிலிருந்து 6 கி.மீ. வடமேற்கில் உள்ளது.

மூலவர் : பக்தவத்சலப் பெருமாள், பத்தராவிப் பெருமாள் [நின்ற திருக்கோலம்] கிழக்கு முகம்

தாயார் : அபிஷேக வல்லி

தீர்த்தம் : தர்சனபுஷ்கரணி

விமானம் : உத்பல விமானம்

பேறுபெற்றோர் : வருணனும், உரோமச முனிவரும்

விசேடம் : இக்கோயிலின் விமானம், மண்டபம் அரண்யம், சரஸ், க்ஷேத்திரம், ஆறு, நகரம் ஆகிய 7அம்சங்களும் அமுதமயமாக இருப்பதால் இதற்கு சப்தாம் ருத க்ஷேத்திரம் என்ற பெயர் வழங்கலாயிற்று. திருமங்கையாழ்வார் 14 பாசுரங்கள்–மங்களாசாசனம்.

27. **அன்றானேழ் வென்றான் அபிடேக வல்லிக்கோன்**
**கன்றால் விளவெறிந்தான் கண்ணமங்கை-நின்றானை**
**பத்தர்தம் ஆவியெனும் பக்தவத்ச லன்தன்னை**
**நித்தமுமென் நெஞ்சே நினை.**

ஆன்-எருது. நப்பின்னையை கைப்பற்ற 7 எருதுகளை வென்றவன்.

## 28. திருக்கவித்தலம்
### (கபிஸ்தலம் கிருஷ்ணாரண்யத்தலம்)

இத்தலம் கும்பகோணம் - திருவையாறு பஸ்மார்க்கத்தில் உள்ளது. தஞ்சை மாவட்டத்திலுள்ள பாபநாசத்திற்கு வடக்கே 3 கி.மீ. தூரத்தில் உள்ளது. டவுன் பஸ்வசதி உண்டு.

மூலவர் : கஜேந்திரவரதன் [புஜங்கசயனம்]

தாயார் : ரமாமணிவல்லி [பொற்றாமரையாள்] தனிக்கோயில்

தீர்த்தம் : கஜேந்திர புஷ்கரணி, கபிலதீர்த்தம்.

விசேடம் : 'ஆதிமூலமே' என்று அழைத்த கஜேந்திரன் என்ற யானைக்கு அபயம் அளித்த தலம். ஆஞ்சநேயர் வரம்

பெற்ற தலம். இத்தலத்துப் பெருமானை "ஆற்றங்கரை கிடக்கும் கண்ணன்" என்பர். இப்பெருமானை திருமழிசை யாழ்வார்.ஒரு பாசுரத்தால் பாடியுள்ளார்.

28. **நாற்றத் துழாய்முடியன் நால்வாய்க் கருள்வரதன்**
**பொற்றா மரையாள்வாழ் பொன்மார்பன்-ஆற்றங்**
**கரைகிடக்கும் கண்ணன் கவித்தலத்தோன் சொன்ன**
**உரைகிடக்கும் எந்தன் உளம்.**

நால்வாய்-தொங்கும்வாய் யானை
உரைகிடக்கும்-கண்ணபிரான் உரைத்த சரமச்சுலோகம்

## 29. திருவெள்ளியங்குடி

கும்பகோணத்திற்கு வடகிழக்கே சுமார் 20 கி.மீ. தொலைவில் உள்ளது. கும்பகோணம் அணைக்கரை செல்லும்பஸ்ஸில் சேங்கானூரில் இறங்கி 1 கி.மீ. தூரம் நடந்து இத்தலத்தை அடையலாம்.

மூலவர் : கோலவில்லிராமன் [புஜங்கசயனம்] கிழக்குநோக்கிய திருமுகம்.
உத்ஸவர் : சிருங்கார சுந்தரன்
தாயார் : மரகதவல்லி
தீர்த்தம் : சுக்கிர,பிரம்ம,பரசுராம,இந்திர தீர்த்தங்கள்.
தலவிருட்சம் : கதலீ [வாழைமரம்]
பேறுபெற்றோர் : சுக்கிரன், பிரமன், இந்திரன், பரசுராமன் மயன், மார்க்கண்டேயர், பூமிதேவி, ஆகியோர்.
விசேடம் : சுக்கிரன்-வெள்ளியார்- இவர் வணங்கி அருள் பெற்றதால் வெள்ளியங்குடி என்ற பெயர் பெற்றது.
மங்களாசாசனம் : திருமங்கையாழ்வார் 10 பாசுரங்கள்

29. **மஞ்சுவண மாயோன் மரகதவல் லிக்கினியன்**
**விஞ்சு புகழ்கோல வில்லிராமன்-தஞ்சமென்ற**
**தேவரிடர் தீர்த்த திருவெள்ளி யங்குடியான்**
**சேவடிசீர் என்றும் நீ செப்பு.**

மஞ்சு-மேகம், விஞ்சுபுகழ்-மிகுந்தபுகழ்

## 30. திருமணிமாடக்கோயில் (திருநாங்கூர்)

சீர்காழியிலிருந்து சுமார் 8 கி.மீ தூரத்தில் திருநாங்கூருக் குள்ளேயே மேற்குதிசையில் உள்ளது. டவுன்பஸ்ஸில் செல்லலாம்.

மூலவர் : நாராயணன், நந்தாவிளக்கு [வீற்றிருக்கும் நிலை] கிழக்கு நோக்கிய சேவை

உத்ஸவர் : நாராயணன், அளத்தற்கரியான்

தாயார் : புண்டரீகவல்லி.

தீர்த்தம் : இந்திரபுஷ்கரணி, ருத்ர புஷ்கரணி

விமானம் : பிரணவ விமானம்

விசேடம் : தை அமாவாசைக்கு மறுநாள் திருநாங் கூரில் 11 திவ்ய தேசத்து பெருமாள்களும் கருடவானங் களில் இங்கு எழுந்தருளி கருடசேவை உற்சவம் நடைபெறு வது பிரசித்தம் திருமங்கையாழ்வாரால் 12 பாசுரங்களால் பாடல் பெற்றது.

30. **மண்டுபுகழ் நாங்கை மணிமாடக் கோயிலமர்**
**புண்டரீக வல்லிகேள்வன் புள்ளூரும்-வண்டுளவன்**
**நந்தா விளக்கென்னும் நாரணன் பேரோத**
**தந்தாள்வான் நற்பதமே தான்.**

மண்டுபுகழ் - நிறைந்த, மிகுந்த புகழ்
புள்ளூர்தல்-கருடவாகனன்

## 31. திருவைகுந்த விண்ணகரம் (திருநாங்கூர்)

இதுவும் திருநாங்கூரின் வடபகுதியில் அமைந்துள்ளது.

மூலவர் : வைகுந்த நாதன், தாமரைக்கண்ணுடைய பிரான். [ஸ்ரீதேவி, பூதேவியுடன் வீற்றிருக்கும் நிலை கிழக்கே திருமுகம்.]

தாயார் : வைகுந்தவல்லி

தீர்த்தம் : லட்சுமி புஷ்கரணி, உதங்கபுஷ்கரணி, விரஜா தீர்த்தம்.

விமானம் : அனந்த சத்திய வர்த்தக விமானம்

பேறுபெற்றோர் : உதங்க முனிவர்

விசேடம் : 11 கருட சேவை பிரசித்தம். திருமங்கை யாழ்வாரால் 10 பாசுரங்கள் மங்களாசாசனம்.

31. **வையமேத்தும் நாங்கையுள் வைகுந்த விண்ணகரில்**
**வையமுய்ய வந்தமர்ந்த வான்மாயன்-செய்யவளாம்**
**வைகுந்த வல்லிமேவும் வைகுந்த நாதனை**
**வைகலும் ஏத்தி வணங்கு.**

வைகலும் - நாள்தோறும். ஏத்துதல் - துதித்தல், புகழ்தல்

## 32. திருஅரியமேயவிண்ணகரம் (திருநாங்கூர்)

இதுவும் திருநாங்கூருக்குள்ளேயே ஊரின் தென்பகுதியில் உள்ளது. குடமாடுகூத்தர் கோயில் என்றுதான் பலருக்கு தெரியும்.

மூலவர் : குடமாடு கூத்தன். [சீதேவி பூதேவியுடன் வீற்றிருந்த நிலையில் கிழக்கு நோக்கியுள்ளார்] தைலக்காப்புத் திருமேனி.

உத்ஸவர் : சதுர்ப்புஜங்களுடன் கோபாலன்

தாயார் : அம்ருதகடவல்லி. [தனிக்கோயில்]

தீர்த்தம் : கோடிதீர்த்தம், அமிர்த தீர்த்தம்

விமானம் : உச்சச்சிருங்க விமானம்

விசேடம் : திருநாங்கூர் கருடசேவையில் பங்கேற்கும் 11 பெருமாள்களுள் இவரும் ஒருவர். திருமங்கையாழ்வார் மங்களாசாசனம் 10 பாசுரங்கள்.

32. **அண்டர்கோன் நாங்கை அரிமேய விண்ணகரான்**
**வண்டுளவ மாலமுத வல்லிகேள்வன் -அண்டருய்ய**
**குன்றெடுத்த ஆயன் குடமாடு கூத்தனை**
**என்றும் நினைந்துருகி ஏத்து.**

குறிப்பு:- முதல்வரியில் உள்ள அண்டர் என்பது தேவர்களையும் இரண்டாவது வரியில் உள்ள தனிச் சொல் அண்டர் என்பது ஆயர்களையும் (இடையர்) குறிக்கும்.

## 33. திருத்தேவனார்தொகை (கீழச்சாலை)

சீர்காழியிலிருந்து தென்கிழக்கில் 6 கி.மீ. தூரத்தில் உள்ளது. சீர்காழி-திருவெண்காடு பஸ்மார்க்கத்தில் திருவாலி யில் இறங்கி சுமார் 1 கி.மீ. தூரம் சென்றால் இத்தலத்தையடை யலாம். மண்ணியாற்றின் தென்கரையி லுள்ளது.

மூலவர் : தெய்வநாயகன். [நின்ற திருக்கோலம்]

உத்ஸவர் : மாதவப்பெருமாள்

தாயார் : கடல்மகள் நாச்சியார்

உத்ஸவர் : மாதவநாயகி

விமானம் : சோபன விமானம்

தீர்த்தம் : சோபன புஷ்கரணி, தேவ சபா புஷ்கரணி.

விசேடம் : இங்கு தேவர்கள் கூடி பேசியதாக வரலாறு. இதுவும் திருநாங்கூர் 11 கருடசேவையில் பங்கு பெறும் தலங்களில் ஒன்று.

33. **கருத்தமுகில் வண்ணன் கடல்மகள்தன் கேள்வன்**
**திருத்தேவ னார்தொகைவாழ் தீர்த்தன்-மருத்துவனாய்**
**தீவினைகள் தீர்த்தருளும் தெய்வநாய கன்கழலை**
**சேவித்தல் என்றும் சிறப்பு.**

முகில்-மேகம். தீர்த்தன்-தூயோன், கடவுள்

## 34. திருவண்புருடோத்தமம் (திருநாங்கூர்)

இக்கோயில் திருநாங்கூரிலேயே வட பகுதியில் உள்ளது. இதனை புருஷோத்தமன் கோயில் என்பர்.

மூலவர் : புருஷோத்தமன் [நின்ற திருக்கோலம்] கிழக்கே திருமுகம்.

தாயார் : புருஷோத்தம நாயகி. [தனிக்கோயில்]

விமானம் : சஞ்சீவி விக்கிரக விமானம்

தீர்த்தம் : திருப்பாற்கடல் தீர்த்தம்.

பேறுபெற்றவர் : உபமன்யு.

விசேடம் : 11 கருட சேவையில் இதுவும் ஒன்று. உத்ஸவப்பெருமானின் திருஉருவம் மிக அழகியது. குறிப்பு: திருமணிமாடக்கோயில், அரிமேய விண்ண கரம், திருத்தெற்றியம் பலம், திருவண்புருடாத்தமம் இந்நான்கும் திருநாங்கூரின் ஒரே தெருவின் பக்கங்களில் உள்ளன.

34. ஓங்கோத வண்ணன் உலகளந்த மாமாயன்
நீங்காத செல்வம் நிறைந்தநன்-நாங்கையுள்
வண்புரு டோத்தமதில் வையமுய்ய நின்றருளும்
ஒண்புரு டோத்தமன்பேர் ஓது.

ஓங்கு+ஓதம்-சிறந்த கடல், ஒண் - ஒளிபொருந்திய

## 35. திருச்செம்பொன்செய்கோயில்(திருநாங்கூர்)

இதுவும் திருநாங்கூரிலேயே உள்ளது. ஊரின் கீழ்பகுதியில் உள்ளது.

மூலவர் : பேரருளாளன் [நின்ற திருக்கோலம்] கிழக்கே திருமுகம்.

உத்ஸவர் : ஹேமரங்கர், செம்பொன்னரங்கர்

தாயார் : அல்லிமாமலர் நாச்சியார்.

விமானம் : கனகவிமானம்

தீர்த்தம் : நித்தியபுஷ்கரணி, கனக தீர்த்தம்

விசேடம் : இராவண வதத்திற்குப்பின் ஸ்ரீராமர் தங்கத்தால் செய்த பசுவை ஓர் அந்தணருக்கு தானம் செய்தார். அதைக்கொண்டு இக்கோயிலைக் கட்டியதால் செம்பொன் செய் கோயில் என பெயர்ஏற்பட்டதாகவும் வரலாறு. திருமங்கை யாழ்வார் 10 பாசுரங்களால் மங்களாசாசனம்.11 கருட சேவையில் இப்பெருமாளும் சேவைசாதிக்கிறார்.

35. மன்னு புகழல்லி மாமலராள் தங்கேள்வன்
அன்னையினும் நற்பே ரருளாளன்-இன்னமுதன்
செம்பொன் னரங்கனைச் சேவிப்பீர் நாங்கையுள்
செம்பொன்செய் கோயிற்கே சென்று.

மாமலராள் - பெருமையுள்ள திருமகள்

## 36. திருத்தெற்றியம்பலம் (திருநாங்கூர்)

திருநாங்கூருக்குள்ளேயே உள்ளது. திருத்தெற்றியம் பலம் என்றால் பலருக்குத் தெரியாது. பள்ளி கொண்ட பெருமாள் என்றே பிரசித்தம். இதுவும் 11 கருட சேவையில் சேர்ந்ததாகும்.

மூலவர் : செங்கண்மால், ரங்கநாதன், ஸ்ரீ லஷ்மி ரங்கர், 4 புஜங்கள் [புஜங்கசயனம்] கிழக்குநோக்கி சேவை.

தாயார் : செங்கமலவல்லி.

விமானம் : வேத விமானம்

தீர்த்தம் : சூர்ய புஷ்கரணி

விசேடம் : மூலவர் நாச்சியாருக்கும், ஆதிசேஷனுக்கும் பிரத்யட்யமானார். இச்சந்நிதியுடன் மேலும் 3 சந்நிதிகள் 34 வது சந்நிதியில் குறிப்பிட்டபடி ஒரே தெருவில் உள்ளது. திருமங்கையாழ்வார் 10 பாசுரம் பாடியுள்ளார்.

36. **சீர்மல்கும் நாங்கைத் திருத்தெற்றி யம்பலத்துள்**
**பாருய்ய பாம்பணைமேல் பள்ளிகொண்ட-சீரங்கன்**
**செங்கமல வல்லிமேவும் செங்கண்மால் தாளிணையை**
**துங்கமலர்த் தூவித் தொழு.**

துங்கமலர் - தூய்மையான மலர்

## 37. திருமணிக்கூடம்

இத்தலம் திருநாங்கூரிலிருந்து கிழக்கே 1 கி.மீ தூரத்தில் உள்ளது. இங்குள்ள பெருமாளும் 11 கருட சேவையில் பங்கு பெறுகிறார்.

மூலவர் : வரதராஜப்பெருமான், மணிக்கூட நாயகன். [நின்ற கோலம்]கிழக்கு நோக்கிய பார்வை.

தாயார் : திருமாமகள் நாச்சியார் [ஸ்ரீதேவி] பூதேவி

தீர்த்தம் : சந்திரபுஷ்கரணி

பேறுபெற்றோர் : இந்திரன், கருடன், சந்திரன் ஆகியோர்

திருமங்கையாழ்வாரால் 10 பாசுரங்களால் பாடல் பெற்றவர்.

**37. திருமகள்தன் கேள்வன் திருமணிக்கூ டத்தன்**
**அருமறைக ளேத்தும் அமுதன் -கருமுகிலன்**
**வாரணத்தைக் காத்த வரதரா சப்பெருமான்**
**நாரணனே நம்வினைக்கு நஞ்சு.**

வாரணம்-யானை (கஜேந்திரன் என்ற யானை)
நஞ்சு - விஷம்

## 38. திருக்காவளம்பாடி

இத்தலம் வைத்தீஸ்வரன் கோயில் ரயில் நிலையத்திலிருந்து 8 கி.மீ. தூரத்தில் உள்ளது. சீர்காழியிலிருந்து பூம்புகார் செல்லும் மார்க்கத்தில் உள்ளது. திருநாங்கூரிலிருந்து 3 கி.மீ. தொலைவில் உள்ளது. திருநகரிக்கு அருகாமையில் உள்ளது.

மூலவர் : கோபால கிருஷ்ணன் [ராஜகோபாலன்] ருக்மணி சத்யபாமாவுடன் நின்ற கோலம் கிழக்கு நோக்கிய திருமுகம்.

தாயார் : மடவரல்மங்கை, செங்கமலநாச்சியார்

விமானம் : சுயம்பு விமானம்

தீர்த்தம் : தடமலர்ப்பொய்கை. திருமங்கையாழ்வாரால் 10 பாசுங்களால் பாடல் பெற்றவர். இப்பெருமாளும் 11கருடசேவையில் எழுந்தருளுகிறார்.

**38. படவரவின் உச்சிமிசை பாய்ந்துநடஞ் செய்தோன்**
**மடவரல் மங்கை மணாளன் -தடவயல்சூழ்**
**காவளம் பாடிநின்ற கண்ணன் கழல்பணிவார்**
**மாவளமாய் வாழ்வர் மகிழ்ந்து.**

அரவம் - பாம்பு, நடம்-நடனம்
தடவயல் - பசுமையான வயல்கள், நீர்வளமிக்க வயல்கள்

## 39. திருவெள்ளக்குளம் (அண்ணன்கோயில்)

சீர்காழியிலிருந்து தென் கிழக்கில் சுமார் 10 கி.மீ தூரத்தில் உள்ளது. திருத்தேவனார் தொகைக்கு மேற்கேக 1 கி.மீ. தொலைவில் உள்ளது. இத்தலம் தீர்த்தத்தின் பெயராலேயே திருவெள்ளக்குளம் என வழங்கலாயிற்று. தென்திருப்பதி என்றும் பிரசித்தம்.

மூலவர் : ஸ்ரீநிவாசன், கண்ணன், நாராயணன், அண்ணன் பெருமாள் [திருப்பதி பெருமாளுக்கு அண்ணன்] நின்ற திருக்கோலம். கிழக்கு நோக்கிய சேவை.

தாயார் : அலர்மேல் மங்கை.

உத்ஸவர் : பத்மாவதி, பூவார் திருமகள்

விமானம் : தத்வத் யோதக விமானம்

தீர்த்தம் : திருவெள்ளக்குளம் சுவேத புஷ்கரணி [சுவேதம்-வெண்மை]

விசேடம் : திருநாங்கூர் 11 கருட சேவைப் பெருமாள் களில் இவரும் ஒருவர். திருப்பதியில் செலுத்தும் பிரார்த் தனையை இங்கே செலுத்தலாம். இத்தலத்தை தென்திருப்பதி என்றும் கூறுவர். திருமங்கையாழ்வார் 10 பாசுரங்கள் பாடி மங்களாசாசனம் செய்துள்ளார்.

39. **விண்ணோர் பெருமானே! வெள்ளக் குளம் நின்ற**
**அண்ணா! அருட்கடலே! அங்கமலக்-கண்ணனே!**
**பூவார் திருமகள்தோய் பொன்மார்பா! நாரணனே!**
**காவாயென் கன்மம் களைந்து.**

**அங்கமலம்-அழகிய தாமரை**

## 40. திருபார்த்தன் பள்ளி

இத்தலம் சீர்காழியிலிருந்து தென்கிழக்கே 11 கி.மீ தொலைவிலும் திருவெண்காட்டிலிருந்து தென்மேற்கே 3 கி.மீ. தூரத்திலும் உள்ளது. பஸ் வசதி உண்டு.

மூலவர் : தாமரையாள் கேள்வன் [நின்ற கோலம்] மேற்கு நோக்கிய திருமுகம்.

உத்ஸவர் : பார்த்த சாரதி.

தாயார் : தாமரை நாயகி.

விமானம் : நாராயண விமானம்

தீர்த்தம் : சங்க தீர்த்தம், கங்காதீர்த்தம்.

விசேடம் : மூலவர், உத்ஸவர் இருவருக்குமே ஸ்ரீதேவி, பூதேவி, நீளாதேவி என்று 3 தேவிகள் உண்டு. திருநாங்கூர் 11 கருடசேவையுள் இதுவும் சேர்ந்தது.

மங்களாசாசனம் : திருமங்கையாழ்வார் 10 பாசுரங்கள்

40. **தண்டுளவத் தார்மார்பன் தாமரையாள் கேள்வனவன்**
**மண்டலத்தோ ருய்யநின்ற மாமாயன்-புண்டரிகன்**
**பார்த்தன்தேர் சாரதியாய் பாரதங்கை செய்தானை**
**பார்த்தன் பளியிற் பணி.**

பாரதம் கை செய்தான் - பாரதயுத்தத்தை நடத்தியவன்

சோழநாட்டுத் திருப்பதிகள்

**40ம் நிறைவு பெற்றது**

# II. பாண்டியநாட்டுத் திருப்பதிகள் - 18

## 1. திருமாலிருஞ்சோலை

### (அழகர் கோயில்)

இத்தலம் மதுரையிலிருந்து வடக்கே சுமார் 20 கி.மீ தூரத்திலுள்ளது. மதுரையிலிருந்து டவுன் பஸ்கள் நிறைய செல்கின்றன.

மூலவர் : அழகர், கள்ளழகர்,மாலாங்காரர், மாலிருஞ்சோலை நம்பி.[நின்ற கோலம்] கிழக்கு நோக்கிய திருமுகம்.

தாயார் : சுந்தரவல்லி, ஸ்ரீதேவி என்றும் பெயர். [தனிக்கோயில்]

விமானம் : சோமசுந்தர விமானம்

தீர்த்தம் : நூபுரகங்கை, சிலம்பாறு

தலவிருட்சம் : அரசமரம், சந்தனமரம்

பேறுபெற்றவர்கள் : மலையத்துவஜபாண்டியன், தருமதேவதை [எமன்]

விசேடம் : மூலவர், உத்ஸவர் இருவருமே பஞ்சாயுதங்களுடன் விளங்குகின்றனர். மலையடிவாரத்தில் இச்சந்நிதி உள்ளது. மலையின் மேலே முருகப் பெருமானின் சந்நிதி உள்ளது. பழமுதிர்ச்சோலை என்ற பெயரில் வழங்குகிறது.

மங்களாசாசனம் : பெரியாழ்வார் 34 பாசுரங்கள். ஆண்டாள் 11 பாசுரங்கள், திருமங்கையாழ்வார் 33 பாசுரங்கள், பூதத்தாழ்வார் 31 பாசுரங்கள், பேயாழ்வார் 1 பாசுரம், நம்மாழ்வார் 46 பாசுரங்கள். ஆக 128 பாசுரங்கள்.

41. **மஞ்சுதவழ் பூம்பொழில்சூழ் மாலிருஞ் சோலைநின்ற**
**கஞ்ச மலர்க்கண்ணா! கள்ளழகா!- விஞ்சுபுகழ்**
**சுந்தரவல் லிக்கினிய சுந்தரனே! தூமணியே!**
**எந்தனிடர் தீர்க்க இரங்கு.**

மஞ்சு - மேகம், கஞ்சமலர் - தாமரைப்பூ

## 2. திருக்கோட்டியூர்

இது ராமநாதபுரம் மாவட்டத்திலுள்ள திருபத்தூரிலிருந்து 12 கி.மீ. தூரத்தில் உள்ளது. மதுரையிலிருந்து பஸ்ஸல் திருப்பத்தூர் சென்று அங்கிருந்து சிவகங்கை செல்லும் பஸ்ஸில் திருக்கோட்டியூருக்கு வந்து சேரலாம்.

மூலவர் : உரகமெல்லணையான். [புஜங்க சயனம். கிழக்கு நோக்கி சேவை சாதிக்கிறார்.]

உத்ஸவர் : சௌமிய நாராயணன்

தாயார் : திருமாமகள் நாச்சியார் [தனிக்கோயில்]

விமானம் : அஷ்டாங்கவிமானம்

தீர்த்தம் : தேவ புஷ்கரணி [திருப்பாற்கடல்]

தலமரம் : பலாமரம்

மங்களாசாசனம் : 1.பெரியாழ்வார் 22 பாசுரங்கள்.
2. திருமங்கையாழ்வார் 13 பாசுரங்கள்
3. பூதத்தாழ்வார் 2 பாசுரங்கள்
4.பேயாழ்வார் 1 பாசுரம்
5. திருமழிசையாழ்வார் 1 பாசுரம்
ஆக 39 பாசுரங்கள்.

விசேடம் : தேவர்கள் பிறர் அறியாமல் கோஷ்டியாக இங்கு வந்ததால் இத்தலத்திற்கு திருக்கோட்டியூர் என்ற பெயர் பெற்றது.

இக்கோயில் 4 மாடிகள் கொண்டது. முதல் மாடியில் உரக மெல்லணையானின் சயன திருக்கோலம். 4 வது மாடியிலிருந்து தான் உடையவர் திருமந்திரார்த்தத்தை வெளிப் படையாக எல்லோருக்கும் உபதேசித்தார். இக்கோயிலின் விமானத்து நிழல் கீழே விழுவது இல்லை.4 மூலையிலும் மூலைக்கு இரண்டாக மொத்தம் 8 விமானங்கள் இருப்பதால் அஷ்டாங்க விமானம் என்ற பெயர் ஏற்பட்டது.

**42. உம்பரெலா மேத்தும் உரக மெலணையான்
நம்பெருமான் சௌமிய நாரண-நம்பி
திருமா மகள்தோய் திருக்கோட்டி யூரான்
கருமா முகில்வணனே காப்பு.**

**உரகம்-பாம்பு ஆதிசேடன்,**
**உரக மெலணையான் - ஆதிசேடனை படுக்கையாகக்கொண்டவன்**
**தோய்தல் - பொருந்துதல் உறைதல்**
**உம்பர் - வானவர் தேவர்கள், முகில் - மேகம்**

## 3. திருமெய்யம்

இது புதுக்கோட்டைக்கும் காரைக்குடிக்கும் மத்தியில் உள்ள ரயில்வேஸ்டேஷன். புதுக்கோட்டைக்குத் தெற்கேக 20 கி.மீ. தூரத்தில் உள்ளது. திருச்சி-மானாமதுரை ரயில் மார்க்கத்தில் திருமயம் என்ற நிலையத்தில் இறங்கி 1 கி.மீ. தூரம் சென்று இவ்வூரை அடையலாம். திருமெய்யம் என்பது இன்று திருமயம் என வழங்கப்படுகிறது.

**மூலவர் : சத்யகிரி நாதன், சத்தியமூர்த்தி [நின்றிருக்கும் நிலை] கிழக்கு நோக்கிய திருமுகம்.**

**உத்ஸவர் : மெய்யப்பன்**

**தாயார் : உய்யவந்த நாச்சியார்**

**விமானம் : சத்திய கிரிவிமானம்**

**தீர்த்தம் : சத்திய தீர்த்தம், கதம்ப புஷ்கரணி**

**விசேடம் : இக்கோயிலின் 2வது சந்நிதி சிறிய மலை மீது அமைந்துள்ளது. இது ஓர் வேலைப்பாடுள்ள குடை வரைக் கோயில். ஸ்ரீ ரங்க பெருமாளை விட பெரிய திருமேனியுடன் சயன கோலத்தில் உள்ளார்.**

**பேறு பெற்றோர் : ஆதிசேஷன், சந்திரன், சந்தியதேவதைகள். திருமங்கையாழ்வாரால் 9 பாசுரங்கள் மங்களா சாசனம்.**

43. **உய்யவந்த நாச்சி ஒளிரும் திருமார்பன்**
**மெய்யமலை மேவிநின்ற மேகவணன்-மெய்யப்பன்**
**சத்திய மூர்த்தியெனும் சத்யகிரி நாதனை**
**பத்தியுடன் ஏத்திப் பணி.**

## 4. திருப்புல்லாணி (தர்ப்பசயனம்)

இத்தலம் இராமநாதபுரத்துக்கு தெற்கே 8 கி.மீ. தொலைவில் உள்ளது. பேருந்து வசதி உண்டு.

மூலவர் : கல்யாண ஜகநாதன் [தெய்வச்சிலையார்] நின்ற திருக்கோலம். சக்ரவர்த்திதிருமகன் தர்பசயனம். கிழக்கே திருமுக சேவை.

தாயார் : கல்யாணவல்லி, பத்மாஸநி என்றஇரண்டு தாயார்கள்

விமானம் : கல்யாண விமானம்

தீர்த்தம் : ஹேம, சக்ர தீர்த்தங்கள்

பேறுபெற்றோர் : புல்லாரண்ய முனி, கண்ணுவர். திருமங்கையாழ்வாரால் 21 பாரசுங்களால் மங்களாசாசனம்.

விசேடம் : இராமர் இங்கே அணைகட்ட வந்தபோது கண்வருக்கு திவ்யமானவில்லைக் கொடுத்ததால் 'தெய்வச் சிலையார்' என்ற பெயர் வந்ததாக வரலாறு. சேதுக்கரை சென்று சமுத்திர ஸ்நானம் [ஆதி சேதுவில்] செய்து விட்டு வரலாம்.

**44. பொங்கு திரையுலவு புல்லாணி மேவியுறை**
**செங்கண்மால் தெய்வச் சிலையனெனும்-புங்கவனாம்**
**கந்தங் கமழ்துளவன் கல்யா ணசெகநாதன்**
**வந்திப்பார்க் (கு) ஈவான் வலம்.**

திரை - அலை, வலம் - வெற்றி, உயர்வு;சிலை - வில்,

## 5. திருத்தண்கால் (திருத்தண்காலூர்)

இது விருதுநகர்-தென்காசி ரயில் பாதையின் இடையில் உள்ள ரயில்நிலையம். ஸ்ரீ வில்லிபுத்தூருக்கு அருகில் 2 கி.மீ. தூரத்தில் உள்ளது. விருதுநகரிலிருந்து பஸ்ஸில் வரலாம்.

மூலவர் : நின்ற நாராயணன் [கிழக்கே திருமுகம்]

உத்ஸவர் : திருத்தண் காலப்பன் [நின்ற கோலம்]

தாயார் : செங்கமலத்தாயார் [தனிக்கோயில்] அன்னநாயகி, அனந்தநாயகி, அமிர்தநாயகி, ஜாம்பவதி என்ற பெயர்களுமுண்டு.

விமானம் : தேவசந்திர விமானம்

தீர்த்தம் : பாபவிநாச தீர்த்தம், திருமங்கையாழ்வார் 4 பாசுரங்கள், பூத்தாழ்வார் 1 பாசுரம் மங்களாசாசனம்.

விசேடம் : கோயில் குன்றின்மேலுள்ளது. திருமகள் வந்து இங்கு தங்கியதால் திருத்தங்கல் என்றாயிற்று. கருடன் சர்ப்பத்துடனும், அமிர்த கலசத்துடனும் விளங்குகிறார்.

45. **தாரணியோ ருய்யதிருத் தண்காலூர் மேவிநின்ற**
**நாரணனே! நற்றுளவா! ஞாலமுண்ட-பூரணனே!**
**செங்கமலை மன்னியுறை சீரார் திருமார்பா!**
**புங்கவனே! புன்பிறவி போக்கு.**

## 6. திருமோகூர்

இத்தலம் மதுரைக்கு கிழக்கே 12 கி.மீ தூரத்தில் உள்ளது. மதுரை பெரியார் பஸ் நிலையத்திலிருந்து டவுன் பஸ்கள் இவ்வூருக்கே நேராக செல்கின்றன.

மூலவர் : காளமேகப்பெருமாள் [நின்றகோலம்] வலது கையில் வரத ஹஸ்தம், இடது கையில் கதையுடன் கிழக்கு நோக்கிய சேவை.

உத்ஸவர் : திருமோகூர் ஆப்தன் [பஞ்சாயுதங்களுடன்]

தாயார் : மோகூர் வல்லி, மோகனவல்லி, மேகவல்லி [தனிக்கோயில்]

விமானம் : சதுர்முக விமானம்

தீர்த்தம் : க்ஷீராப்தி புஷ்கரணி
திருமங்கையாழ்வார் 1 பாசுரம் நம்மாழ்வார்

11 பாசுரங்களால் மங்களாசாசனம்.

விசேடம் : இங்குள்ள சக்கரத்தாழ்வார் சந்நிதி வெகு சிறப்புடையது. இங்கு பள்ளி கொண்ட பெருமாள் கோயிலும் உள்ளது.

46. **மூவர்க்கும் முன்முதல்வன் மோகன வல்லிகேள்வன்**
**தேவரும்வந் தேத்தும் திருமோகூர் - மேவிநின்றான்**
**காளமே கப்பெருமான் கன்மம் களைந்தருள்வான்**
**நாளுமவன் தாள்மலரை நாடு.**

மூவர் : திருமால், சிவன், பிரம்மன்

## 7. திருக்கூடல் (மதுரை)

மதுரை மாநாகரத்தின் மையப்பகுதியில் உள்ள பேருந்து நிலையத்திற்கு அருகாமையில் உள்ளது. மங்கம்மாள் சத்திரத்திலிருந்து தெற்கே சுமார் 100 கெஜ தூரத்தில் உள்ளது. கூடலழகர் சந்நிதி என்று கூறுவர்.

மூலவர் : கூடலழகர்– வீற்றிருந்த கோலத்தில் கிழக்கு நோக்கிய சேவை.

தாயார் : மதுரவல்லி [தனிக்கோயில்] இவருக்கு வகுளவல்லி, வரகுணவல்லி,மரகதவல்லி என்ற பெயர்களும் உண்டு.

விமானம் : அஷ்டாங்க விமானம்

தீர்த்தம் : ஹேமபுஷ்கரணி, சக்கர தீர்த்தம், வைகைநதி.

பேறுபெற்றோர் : பிருகு, சனத்குமாரர்கள், பெரியாழ்வார் முதலானோர்.
திருமங்கையாழ்வார் 1 பாசுரமும், திருமழிசையாழ்வார் 1 பாசுரமும் பாடியுள்ளனர்.

விசேடம் : இது பெரியாழ்வார் பல்லாண்டு பாடிய தலம். இத்தலத்தில் மேகங்கள் ஒன்று கூடியதால் திருக்கூடல் எனப் பெயர் பெற்றது.

47. **மட்டவிழும் பூந்துளவன் மாமதுர வல்லிக்கோன்**
**விட்டுசித்தர் கொண்டாடும் விண்டவனாம் -மட்டிலாசீர்**
**கூடலழ கன்தன் குரைகழலை பற்றுவார்க்கு**
**வீடளிப்பான் தானே விழைந்து.**

மட்டவிழ்தல்-தேன்சிந்துதல்
குரைகழல் - பெருமையுள்ள பாதம்
வீடு- மோட்சம்

## 8. திருவில்லிபுத்தூர் (ஸ்ரீவில்லிபுத்தூர்)

இத்தலம் நெல்லை மாவட்டத்தைச் சேர்ந்தது. விருதுநகர் - தென்காசி ரயில் மார்க்கத்தில் இவ்வூர் ரயில்வே ஸ்டேஷன் உள்ளது. மதுரையிலிருந்தும் மற்றும் பல நகரங்களிலிருந்தும் பேருந்து வசதிகள் உண்டு.

மூலவர் : வடபத்ர சாயி [ரங்கமன்னார்] புஜங்க சயனம். கிழக்கு நோக்கிய திருமுகம்.

தாயார் : ஆண்டாள் [கோதை நாச்சியார்]

விமானம் : சம்சன விமானம்

தீர்த்தம் : திருமுக்குளம்

பேறுபெற்றோர் : மண்டூக முனி, பெரியாழ்வார்

மங்களாசாசனம் : பெரியாழ்வார் 1 பாசுரம், ஆண்டாள் 1 பாசுரம்

விசேடம் : பெரியாழ்வாரும், ஆண்டாளும் அவதரித்த தலம். இருவருக்கும் தனித்தனி சந்நிதி உள்ளது. இங்கு இரவு ஆண்டாளுக்கு சூட்டிய மாலையை மறுநாள் பெருமாளுக்கு சூட்டப்படுகிறது.

48. **வண்டுளவ மார்பன் வடபத் ரசயனன்**
**விண்டுசித்த ரேத்துதிரு வில்லிபுத்தூர்- கண்டுயில்வோன்**
**மண்டுபுகழ் ஆண்டாள் மனத்துறையும் மாலவனாம்**
**விண்டுவின் நாமம் விளம்பு.**

மண்டுபுகழ்-மிகுந்த புகழ்

## 9. திருக்குருகூர் (ஆழ்வார் திருநகரி)

### (ஆழ்வார் நவ திருப்பதி 1.)

இத்தலம் திருநெல்வேலி-திருச்செந்தூர் பஸ் மார்க்கத்தில் உள்ளது. தாமிரபரணியாற்றின் தென்கரையில் உள்ளது.

மூலவர் : ஆதிநாதன், ஆதிப்பிரான், பொலிந்து நின்ற பிரான் [நின்ற கோலம்]

தாயார் : ஆதிநாதவல்லி, குருகூர் வல்லி என்ற 2 தனிக்கோயில் நாச்சியார்கள்.

விமானம் : கோவிந்த விமானம்

தீர்த்தம் : பிரம்ம தீர்த்தம், தாமிரபரணி நதி

தலமரம் : புளியமரம்

நம்மாழ்வார் 11 பாசுரங்களால் மங்களாசாசனம் செய்துள்ளார்.

விசேடம் : நம்மாழ்வார் அவதாரத்தலம். மூலவர் சுயம்பு வடிவாய் தோன்றியவர். பிரம்மா, மதுரகவி, நம்மாழ்வாருக்கு சேவை சாதித்தவர். ஆழ்வார் பொந்தில் வீற்றிருந்த புளியமரம் இன்னும் உள்ளது. 16 ஆண்டுகாலம் கண்மூடி மவுனமாயிருந்தார்.

49. **வேதம் விரித்தநா வீறனேத்தும் வண்குருகூர்**
**ஆதிநாத வல்லிகேள்வன் ஆழிவணன்-ஆதிநாதன்**
**பொன்னாழிக் கையன் பொலிந்துநின்ற யெம்பிரானை**
**இன்னே தொழநீ எழு.**

நாவீறன் - நம்மாழ்வாரின் பெயர்களில் ஒன்று.
இன்னே - இப்பொழுதே.

## 10. திருத்தொலைவில்லிமங்கலம்

### (ஆழ்வார் நவ திருப்பதிகளில் இரண்டு இரட்டைதிருப்பதி)

ஆழ்வார் திருநகரியிலிருந்து கிழக்கே 3 கி.மீ. தொலைவில் தாமிரபரணி ஆற்றைக் கடந்தால் இத்தலத்தையடையலாம்.

1. முதல்கோயில்: ஆற்றின் கரையில் உள்ளது

மூலவர் : ஸ்ரீநிவாசன் [தேவபிரான்] நின்றகோலம் கிழக்கு நோக்கிய பார்வை.

தாயார் : மூலவருடன் பெரிய பிளாட்டியாரும் பூமாதேவியும் உள்ளனர். தனிக் கோயில் இல்லை.

2. இரண்டாவது கோயில் : வாய்க்கால் கரையில் உள்ளது.

மூலவர் : அரவிந்தலோசனன், செந்தாமரைக் கண்ணன், [வீற்றிருக்கும் கோலம்] கிழக்கே திருமுகம்.

தாயார் : கருந்தடங்கண்ணி நாச்சியார்

விமானம் : குமுத விமானம்

தீர்த்தம் : வருணதீர்த்தம், தாமிரபரணி ஆறு

பேறுபெற்றோர் : இந்திரன் வருணன் வாயு ஆகியோர்

நம்மாழ்வாரால் 11 பாசுரங்களால் மங்களாசாசனம் பெற்றவர்.

விசேடம் : இரண்டு தலங்களையும் சேர்த்து ஒரே திவ்விய தேசமாகக் கருதப்படுகிறது. குபேரனால் சாபம் பெற்ற வித்யாதரனும் அவன் மனைவியும் தராசும் [துலை] வில்லும் ஆயினர். இங்கு இவ்விருவரும் துலையும், வில்லும் சாபவிமோசனம் பெற்றதால் துலைவில்லி மங்கலம் என்று பெயர் வழங்கலாயிற்று.

50. **அந்தமாதி இல்லான் அரவிந்த லோசனன்**
**செந்தா மரைக்கண்ணன் தேவபிரான் -எந்தை**
**தொலைவில்லி மங்கலம்வாழ் தூயோன்தா ளேத்த**
**உலைவில்லை என்றும் உமக்கு.**

அந்தம் ஆதி இல்லான் - முடிவும் முதலும் - இல்லாதவன்

உலைவு - அழிவு, வறுமை, நடுக்கம், தோல்வி, துன்பம்.

## 11. திருச்சிரீவரமங்கை

(திருச்சிரீவர மங்கலநகர், வானமாமலை,
நாங்குநேரி, தோதாத்திரி க்ஷேத்திரம்)

இது திருநெல்வேலியிலிருந்து நாகர்கோயில் செல்லும் சாலையில் 28 கி.மீ. தொலைவில் உள்ளது. நாங்குநேரி வானமாமலை என்றும் அழைப்பர்.

மூலவர் : தோதாத்திரி நாதன் [வானமாமலை] வீற்றிருக்கும் நிலை.

உத்ஸவர் : தெய்வநாயகன்

தாயார் : இருபுறமும் சீதேவி பூதேவியுடன் கிழக்கு நோக்கிய திருமுகம். தவிர சீவர மங்கை நாச்சியார் – தனிக்கோயில்.

விமானம் : நந்த வர்த்தன விமானம்

தீர்த்தம் : இந்திரதீர்த்தம் சேற்றுத்தாமரை.

நம்மாழ்வார் 11 பாசுரங்கள் மங்களாசாசனம்.

பேறுபெற்றோர் : பிரம்மா இந்திரன் பிருகு மார்க்கண்டேயர் முதலானோர் பெருமாளுக்கு தினமும் எண்ணெய்க்காப்புத் திருமஞ்சனம்.

விசேடம் : இது தானாக தோன்றிய தலம். வானமாமலை மடத்துக்கு தலைமை இடம்.

**11. செந்நெல் வயல்சூழ் சிரீவரமங் கைமேவி**
**மன்னி யமர்வான மாமலையெம்-இன்னமுதன்**
**தெய்வநாய கன்தன் திருவடியை சேவிக்க**
**உய்விப்பான் நம்மை உகந்து.**

## 12. திருப்புளிங்குடி (ஆழ்வார் நவதிருப்பதி)

இத்தலம் திருநெல்வேலி - திருச்செந்தூர் பஸ்மார்க்கத் திலுள்ள ஸ்ரீவைகுண்டத்திலிருந்து 3 கி.மீ. கிழக்கே உள்ளது. இது தாமிரபரணி ஆற்றின் வடகரையில் உள்ளது.

மூலவர் : காய்சினவேந்தன். [புஜங்க சயனம்] கிழக்கே திருமுகம்.

தாயார் : மலர்மகள் நாச்சியார், பூமகள் நாச்சியார்

உத்ஸவத்தாயார் : புளிங்குடி வல்லி.

விமானம் : வேதசார விமானம்

தீர்த்தம் : வருண, நிருதி தீர்த்தங்கள்

நம்மாழ்வாரால் 12 பாசுரங்கள் மங்களாசாசனம்

விசேடம் : பெருமாள் வயிற்றிலிருந்துதாமரைக் கொடி தனியாக கிளம்பி சுவற்றிலுள்ள பிரம்மாவின் தாமரை மலரு டன் சேர்ந்து கொள்கிறது. பாதங்களை ஜன்னல் வழியாகத்தான் பார்க்க முடியும். வருணன், நிருதி, தருமராஜன் ஆகியோர் பேறு பெற்றவர்கள்.

52. **மண்மகளும் மற்றும் மலர்மகளும் தாள்வருடக்**
**கண்வளரும் காய்சின வேந்தனெனும் -பண்ணவனை**
**புள்ளூரும் மாயோன் புளிங்குடிவாழ் பூவணனை**
**உள்ளுமவர்க் கென்றும் உயர்வு.**

பண்ணவன் - இறைவன், தேவன்

## 13. திருப்பேரை (தென்திருப்பேரை)
## (ஆழ்வார் நவ திருப்பதி)

தென்திருப்பேரை என்ற இத்தலம் ஆழ்வார் திருநகரிலிருந்து 5 கி.மீ. தூரத்தில் கிழக்கே தாமிரபரணி ஆற்றின் தென் கரையில் உள்ளது.

மூலவர் : மகர நெடுங்குழைக் காதன், நிகரில் முகில் வண்ணன் [வீற்றிருக்கும் நிலை] கிழக்கு நோக்கிய பார்வை.

தாயார் : குழைக்காது வல்லிநாச்சியார், திருப்பேரை நாச்சியார். [இரண்டு தனிக்கோயில்]

விமானம் : பத்ர விமானம்

தீர்த்தம் : சுக்கிர புஷ்கரணி, சங்கதீர்த்தம்.

பேறுபெற்றோர் : சுக்கிரன் பிரம்மா

நம்மாழ்வாரால் மங்களாசாசனம் 11 பாசுரங்கள்.

விசேடம் : தூர்வாசர் சாபத்தினால் பூதேவி லட்சுமி எனப்படும் பெயரை அதாவது திருப்பேரை தரித்ததால் இவ்வூருக்கு இப்பெயர் வந்தது. பின்தன் சாபம் தீர தீர்த்தத்தில் தர்ப்பணம் செய்யும்போது மீன் வடிவமுள்ள இரண்டு குண்டலங்களைக்கண்டு பெருமாளுக்கு வழங்க மகர நெடுங் குழைக்காதன் என்ற பெயர் பெருமாளுக்கு உண்டாயிற்று.

53. நிகரில் முகில்வண்ணன் நீண்முடி யம்மான்
மகர நெடுங்குழைக் காதன்-திகிரியான்
தேனமர் பூம்பொழில்சூழ் தென்திருப் பேரையமர்
வானவர்கோன் தாளை வணங்கு.

திகிரியான் - சக்கரப்படையேந்திய திருமால்

## 14. திருவைகுண்டம் (ஆழ்வார் நவதிருப்பதி)

இது திருநெல்வேலி- திருச்செந்தூர் பஸ்மார்க்கத்தில் நெல்லையிலிருந்து சுமார் 26 கி.மீ. தூரத்தில் உள்ளது. தாமிரபரணி ஆற்றின் வடகரையில் உள்ளது.

மூலவர் : ஸ்ரீவைகுண்ட நாதன், கள்ளப்பிரான்
[நின்ற கோலம்] கிழக்கே திருமுகம்.

தாயார் : வைகுந்தவல்லி, பூதேவி
[2 தனிக்கோயில்]

விமானம் : சந்திர விமானம்

தீர்த்தம் : பிருகு தீர்த்தம், தாமிரபரணி நதி

நம்மாழ்வாரால் 2 பாசுரங்களால் மங்களாசாசனம்

விசேடம் : ஆதிசேஷன் குடைபிடிக்கபெருமாள்

நின்ற கோலம் சிறப்புடையது. கால தூஷணன் என்ற கள்வனுக்காக அவனைக்காக்க பெருமாள் தானே அவன் வடிவம் கொண்டு கள்ளப்பிரான் என்று பெயர் பெற்றார்.

54. **கள்ளச் சகடிறுத்துக் கஞ்சனைக் காய்ந்தவனே!**
**கள்ளப் பிரானென்னும் கார்வணாயென்-உள்ளுறைவாய்**
**வைகுந்த வல்லியொடு வைகுண்டம் நின்றருளும்**
**வைகுந்த நாதனே! வந்து.**

சகடிறுத்தான் - சகடாசூரனை அழித்தவன்
(வண்டியின் சக்கரமாக வந்தவன்)
கஞ்சனைக் காய்ந்தவன் - கம்சனை அழித்தவன்

## 15. திருவரகுணமங்கை (ஆழ்வார் நவதிருப்பதி)

இது திருவைகுண்டத்திலிருந்து கிழக்கே 2 கி.மீ. தூரத்தில் உள்ளது. நத்தம் என்றால்தான் பலருக்குத் தெரியும்.

மூலவர் : விஜயாசானப்பெருமாள் ஆதிசேஷன் குடைபிடிக்க தாயாருடன் வீற்றிருக்கும் நிலை. கிழக்கே திருமுகம்.

தாயார் : வரகுணவல்லித்தாயார், வரகுணமங்கைத் தாயார் [தனிக்கோயில் இல்லை]

விமானம் : விஜய கோடி விமானம்

தீர்த்தம் : அக்கினிதீர்த்தம், தேவபுஷ்கரணி

பேறுபெற்றோர் : அக்கினி, ரோமச முனிவர், சத்தியவான் ஆகியோர்

நம்மாழ்வார் 1 பாசுரத்தால் மங்களாசாசனம்.

விசேடசம் : வேதவித் என்ற அந்தணன் பிரார்த்தித்தபடி பகவானுக்கு விஜயாசனர் என்ற பெயர் பெற்றதாக வரலாறு.

55. **வரகுணவல் லிக்கினியன் வண்டுளவ மார்பன்**
**வரகுண மங்கையுள் வாழும் -பரகுணன்**
**வேதங்க ளேத்தும் விசயா சனப்பெருமான்**
**பாதங்கள் யாமுடைய பற்று.**

**பரகுணன் - நற்குணன்முடையவன்,**

**கருணையுள்ளவன் - குணமுடையவன்.**

## 16. திருக்குளந்தை (பெருங்குளம்)
## (ஆழ்வார் நவதிருப்பதி)

ஸ்ரீவைகுண்டத்திலிருந்து வடகிழக்கே சுமார் 10 கி.மீ. தொலைவிலும் திருப்புளிங்குடியிலிருந்து 8 கி.மீ. தொலைவிலும் உள்ளது. மார்க்கம் 52, 54 ஐக் காண்க.

மூலவர் : ஸ்ரீநிவாஸன் [கிழக்கு நோக்கி நின்ற கோல சேவை]

உத்ஸவர் : மாயக் கூத்தன்

தாயார் : அலமேலுமங்கைத் தாயார், குளந்தை வல்லி என இருவர்

விமானம் : ஆனந்தநிலைய விமானம்

தீர்த்தம் : பெருங்குளம்,

பிரத்யட்சம் : பிருஹஸ்பதி

நம்மாழ்வார் மங்களாசாசனம் 1 பாசுரம்.

விசேடம் : கருடனும் உத்ஸவப் பெருமாள் பக்கத்திலிருக்கிறார். அஸ்மசார அரக்கன் மீது பகவான் மாயக்கூத்தாடி கொன்றதால் மாயக்கூத்தன் என்ற பெயர் பெற்றார்.

56. **மண்டு புகழலர்மேல் மங்கை மணவாளன்**
**கொண்டல் வணமாயக் கூத்தனவன்-அண்டரிடர்**
**தீர்த்தருள்செய் மாயோன் திருக்குளந்தை சீநிவாசன்**
**சீர்த்தியையே என்றும் நீ செப்பு.**

**கொண்டல் - மேகம்**

## 17. திருக்குறுங்குடி (வாமனக்ஷேத்திரம்)

இத்தலம் திருநெல்வேலிக்குத் தென்மேற்கே சுமார் 42 கி.மீ. தொலைவில் உள்ளது. நாங்குநேரியிலிருந்து 18 கி.மீ. தூரம். நெல்லையிலிருந்து நேராக செல்ல பஸ்வசதி உண்டு.

மூலவர் : நின்ற நம்பி, குறுங்குடிநம்பி, இருந்த நம்பி, வடுக நம்பி, வைஷ்ணவநம்பி, திருப்பாற்கடல்நம்பி, மலைமேல்நம்பி [கிழக்கே நின்ற கோலம்]

உத்ஸவர் : அழகிய நம்பி

தாயார் : குறுங்குடிவல்லி நாச்சியார் [இரு தனிக்கோயில்கள். நாச்சியார்கள் உண்டு]

விமானம் : பஞ்சகேதக விமானம்

தீர்த்தம் : திருப்பாற்கடல், பஞ்சதுறை, சிந்துநதி

மங்களாசாசனம் : பெரியாழ்வார்1பாசுரம், திருமழிசையாழ் வார் 1 பாசுரம், திருமங்கையாழ்வார் 25 பாசுரங்கள், நம்மாழ்வார் 13 பாசுரங்கள். ஆக 40 பாசுரங்கள்

விசேடம் : திருமங்கையாழ்வார் பரமபதித்ததலம். உடையவரிடம் [ஸ்ரீ ராமாநுஜர்] பெருமாள் சீடனாக நின்று திருமந்திரார்த்தம் பெற்றதாக கூறப்படுகிறது.

57. **மாவலிதன் வேள்வியில் மாணுருவில் சென்றிரந்து**
**மூவடிமண் நீரேற்ற மூர்த்தியவன்-தேவரேத்தும்**
**கோலமணி வண்ணன் குறுங்குடி நின்றநம்பி**
**ஞாலமளந் தான்சீர் நவில்.**

மாணுரு - குள்ளவடிவம், இரத்தல் - யாசித்தல்

## 18. திருக்கோளூர் (ஆழ்வார் நவதிருப்பதி)

திருநெல்வேலி-திருச்செந்தூர் மார்க்கத்தில் ஆழ்வார் திருநகரியிலிருந்து கிழக்கே 3 கி.மீ. சென்று இடையில் தெற்கே பிரியும் ஓர் கிளைப் பாதையில் 1 கி.மீ. சென்றால் இவ்வூரை யடையலாம்.

மூலவர் : வைத்தமாநிதிப் பெருமாள் [புஜங்கசயனம்] கிழக்கே திருமுகம்.

தாயார் : குமுதவல்லி, கோளூர் வல்லி [2 தனிக்கோயில்]

விசேடம் : மதுரகவியாழ்வார் அவதாரஸ்தலம் குபேரன் சாபவிமானசனம் ஆன தலம். பார்வதியின் சாபத்தால் குபேரனை விட்டுப்பிரிந்த நவநதிகளையும் பெருமாள் காத்து வருவதாக வரலாறு.

நம்மாழ்வார் 12 பாசுரங்களால் மங்களாசாசனம்.

58. **குமுதவல்லி மேவுதிருக் கோளூர்வாழ் மாயோன்**
**அமுதன் அரவணையன் அண்டர்க் - கமுதளித்தோன்**
**வைத்தமாநி திப்பெருமான் வார்கழலை போற்றியென்றும்**
**சித்தத்துள் வைத்தல் சிறப்பு.**

**சித்தம் - மனம்**

பாண்டிய நாட்டுத் திருப்பதிகள்
**18**ம் நிறைவு பெற்றது.

# III. மலைநாட்டுத் திருப்பதிகள் - 13

## 1. திருவனந்தபுரம்

இது கேரள மாநிலத்தின் தலைநகர். தமிழக முக்கிய நகரங்களிலிருந்து பேருந்துகள் இயக்கப்படுகிறது.

மூலவர் : அனந்தபத்மநாபன் [புஜங்கசயனம்] அனந்த சயனம் கிழக்கு நோக்கிய திருமுக சேவை.

தாயார் : ஸ்ரீ ஹரிலட்சுமி

விமானம் : ஹேமகூடவிமானம்

தீர்த்தம் : மத்சய தீர்த்தம், பத்ம, வராக தீர்த்தங்கள்

பெருமாளின் காட்சியைக் கண்டவர்கள் :
இந்திரன், சந்திரன், ஏகாதசருத்ரர்கள்

நம்மாழ்வார் 11 பாசுரங்களால் மங்களாசாசனம்.

விசேடம் : பெருமாள் மிகப்பெரிய திருமேனி. தலை, உடல், பாதம் இவைகளை 3 வாயில்கள் மூலமாக தரிசிக்க வேண்டும். இங்கு அனந்தசயன விரதம் இருப்பது விசேஷம்.

59. **ஆழியங் கையன் அனந்தபுரம் கண்வளரும்**
**பாழியந் தோளனந்த பத்மநாபன்-ஆழிவணன்**
**அண்டரெலாம் போற்றும் அரிலட்மி கேள்வனை**
**தொண்டரொடு கூடித் தொழு.**

பாழியந்தோள் - பெருமைமிகுந்த தோளையுடையவன்.

## 2. திருவண்பரிசாரம் (திருப்பதி சாரம்)

திருநெல்வேலியிலிருந்து நாகர்கோயில் வந்து அதற்குப்பின் அங்கிருந்து டவுன் பஸ்ஸில் 4 கி.மீ. தூரம் வடக்கேயுள்ள இவ்வூரை அடையலாம்.

மூலவர் : திருக்குறளப்பன், திருவாழ்மார்பன் [கிழக்கு நோக்கி வீற்றிருக்கும் நிலை]

**தாயார் : கமலவல்லிநாச்சியார்**

**விமானம் : இந்திர கல்யாண விமானம்**

**தீர்த்தம் : லட்சுமி தீர்த்தம்**

இவர் காரி உடைய நங்கை, விந்தை, கருடன் ஆகியோரு க்கு காட்சியளித்தவர். நம்மாழ்வார் மங்களாசாசனம் 1 பாசுரம்.

விசேடம் : நம்மாழ்வாரின் தாயார் உடைய நங்கை அவதரித்த தலம். இலட்சுமி பெருமாளின் திருமார்பில் வாசம் செய்தபடியால் பெருமாளுக்கு திருவாழ்மார்பன் என்ற பெயர் உண்டாயிற்று.

60. **வண்டுமுரல் பூம்பொழில்சூழ் வண்பரிசா ரத்தமர்ந்தாய்**
**வண்டுளவா! நற்கமல வல்லிகேள்வா!-புண்டரிகா!**
**செய்யமலர்ப் பாதா! திருவாழும் மார்பாயான்**
**உய்யவருள் செய்வாய் உகந்து.**

செய்ய - சிவந்த, திரு - திருமகள்.

## 3. திருக்காட்கரை

இது ஆலவாய் - திருச்சூர் ரயில்மார்க்கத்தில் இரிஞ்சாலக்குடா ஸ்டேஷனிலிருந்து சுமார் 15 கி.மீ. தொலைவில் உள்ளது. எர்ணாகுளத்துக்கு அருகிலுள்ள இடப்பள்ளிக்கு சமீபத்தில் உள்ளது.

மூலவர் : காட்கரையப்பன் [தெற்கு திசை நோக்கி நின்ற திருக்கோலம்]

தாயார் : பெருஞ்செல்வநாயகி, வாத்ஸல்யவல்லி நாச்சியார்

விமானம் : புஷ்கல விமானம்

தீர்த்தம் : கபில தீர்த்தம்

பெருமாள் கபில முனிக்கு பிரத்யட்சம்.

நம்மாழ்வார் – மங்களாசாசனம் 11 பாசுரங்கள்.

விசேடம் : இப்பெருமான் வாமனன் என்று அழைக்கப்படுகிறார். இங்கு ஓணம் பண்டிகை பிரசித்தம்.

61. **பேரா யிரத்தான் பெருஞ்செல்வ நாயகிக்கோன்**
**பாராய துண்டுமிழ்ந்தோன் பைந்துளவத்-தாராளன்**
**காரார் முகில்வண்ணன் காட்கரை யப்பனெனும்**
**நாரா யணன்பேர் நவில்.**

## 4. திருமூழிக்களம்

அங்கமாலி ரயில் நிலையத்திலிருந்து மேற்கே 10 கி.மீ. தொலைவில் பாரதப்புழை நதிக்கரையில் இக்கோயில் உள்ளது. எர்ணாகுளத்திற்கு அருகாமையில் உள்ளது.

மூலவர் : திருமூழிக்களத்தான், அப்பன், ஸ்ரீசூக்தி நாதப்பெருமாள். [நின்ற திருக்கோலம்]

தாயார் : மதுரவேணி நாச்சியார்

விமானம் : சௌந்தர்ய விமானம்

தீர்த்தம் : பெருங்குளம், சங்க தீர்த்தம், சிற்றாறு

மங்களாசாசனம் : திருமங்கையாழ்வார் 3 பாசுரங்கள். நம்மாழ்வார் 11 பாசுரங்கள்.

விசேடம் : இப்பெருமானை லட்சுமணன் என்று கூறுகிறார்கள். ஹாரீத முனிவருக்கு காட்சியளித்தவர்.

62. **மண்டுபுக ழப்பா! மதுரவேணி தங்கேள்வா!**
**தண்டுளவ மார்பா! தயாபரனே!-பண்டைவினை**
**முற்றும் களைந்தருள்வாய் மூழிக் களத்தானே!**
**பற்றினேனுன் பாதம் பணிந்து.**

## 5. திருப்புலியூர் (குட்டநாடு)

திருவனந்தபுரத்திலிருந்து கொல்லம் வழியாக எர்ணாகுளம் செல்லும் ரயில்மார்க்கத்தில் செங்கண்ணூர் என்ற ஸ்டேஷனில் இறங்கி அங்கிருந்து மேற்கே 5 கி.மீ. தூரம் சென்றால் இவ்வூரை அடையலாம்.

மூலவர் : மாயப்பிரான் [கிழக்கு நோக்கி நின்ற நிலை]

தாயார் : பொற்கொடி நாச்சியார்

விமானம் : புருஷோத்தம விமானம்

தீர்த்தம் : பூஞ்சுனை தீர்த்தம், பிரஜ்ஞானசரஸ்
சப்தரிஷிகளுக்குப் பெருமாள்
பிரத்யட்சமாகி சேவை சாதித்தவர்.

மங்களாசாசனம்: நம்மாழ்வார் 11 பாசுரம், திருமங்கையாழ்வார் 1 பாசுரம்

விசேடம் : இக்கோயிலில் உள்ள பெருமாளை பீமன் பிரதிஷ்டை செய்ததாக கூறுவர்.

**63. மருப்பொசித்த மாலவனாம் மாயப் பிரானை**
**திருப்புலியூர் நின்றருளும் தேவை-விருப்பமொடு**
**பொற்கொடியாள் தாமருவும் பூவணனை போற்றிசெய**
**நற்பதமே கிட்டும் நமக்கு.**

மருப்பு - யானையின் தந்தம்
(குவலயா பீடம் என்ற யானையின் தந்தம்
ஒசித்தல் - முறித்தல், ஒடித்தல்
பூவண்ணன் - அழகிய வண்ணன், நீலவண்ணன்

## 6. திருச்செங்குன்றூர் (திருச்சிற்றாறு)

திருவனந்தபுரத்திலிருந்து கொல்லம் வழியாக எர்ணாகுளம் செல்லும் ரயில்மார்க்கத்தில் செங்கண்ணூர் என்ற திருச்செங்குன்றூர் ஸ்டேஷன் உள்ளது. இது பெரிய நகரம். திருவல்லாவிலிருந்து தெற்கே 10 கி.மீ. தூரத்தில் உள்ளது.

மூலவர் : இமையவரப்பன் [மேற்கு திசை நோக்கி நின்றகோலம்]

தாயார் : செங்கமலவல்லி.

விமானம் : ஜகத்ஜோதி விமானம்

தீர்த்தம் : சங்க தீர்த்தம், சிற்றாறு

மங்களாசனம் : நம்மாழ்வார் 11 பாரசுங்கள்

விசேடம் : தருமர் இங்கு வந்து பெருமாளை பிரதிஷ்டை செய்ததாக கூறுவர். இங்கு பெருமாள் தேவர்களுக்கு காட்சியளித்து அருளியதால் பெருமாளுக்குகு இமையவரப்பன் என்ற பெயர் உண்டாயிற்று.

64. **செங்கமல வல்லியொடு செங்குன்றூர் நின்றவனை**
**செங்கமலக் கண்ணன் செகமளந்த -புங்கவனை**
**இன்னமுதன் எம்மான் இமையவ ரப்பனை**
**இன்னல் களையநீ ஏத்து.**

இன்னல் - துன்பம்

## 7. திருநாவாய்

இது சென்னை - கள்ளிக்கோட்டை ரயில்மார்க்கத்தில் உள்ள ஒரு ஸ்டேஷன். கோயில் ஸ்டேஷனிலிருந்து தெற்கே 2 கி.மீ. தொலைவில் பாரதப் புழை ஆற்றின் கரையில் உள்ளது. ஷோரனூர், குட்டீஸ்வரம் ஆகிய ஊர்களிலிருந்து பஸ் வசதி உண்டு.

மூலவர் : நாவாய் முகுந்தன், நாராயணன் [கிழக்கு நோக்கி நின்று சேவை]

தாயார் : மலர் மங்கை நாச்சியார், சிறுதேவி

விமானம் : வேத விமானம்

தீர்த்தம் : செங்கமல சரஸ்

மங்களாசாசனம் : திருமங்கையாழ்வார் 2 பாசுரங்கள் நம்மாழ்வார் 11 பாசுரங்கள்.

பேறுபெற்றோர் : கஜேந்திரன், நவயோகிகள்

விசேடம் : பெருமாள் லட்சுமி தேவியை தன்னுடன் ஏகசிம்மாஸனத்தில் அமரச் செய்து கஜேந்திரனின் பூஜையை ஏற்றுக் கொண்டதாக வரலாறு 9 யோகிகள் [நவயோகிகள்] யாகம் செய்ததலம்.

**65. மாவாய் பிளந்தாய் மலர்மங்கை நாயகனே!**
**நாவாய் முகந்தனெனும் நாரணனே-தேவா!**
**கரியினிடர் தீர்த்தவனே! கார்வண்ணா! எந்தன்**
**அருவினையை நீக்கி அருள்.**

மாவாய் பிளந்தவன் - குதிரையாகவந்த அசுரனின் வாயைப்பிளந்தவன்.

கரி- யானை ( கஜேந்திரன் என்ற யானை)

அருவினை - கொடிய வினை

## 8. திருவல்லவாழ் (திருவல்லா)

### (ஸ்ரீவல்லபக்ஷேத்திரம்)

கொல்லம் - எர்ணாகுளம் ரயில்மார்க்கத்தில் திருவல்லாரயில் நிலையத்திலிருந்து 5 கி.மீ. தொலைவில் இக்கோயில் உள்ளது.

மூலவர் : கோலப்பிரான், திருவாழ்மார்பன், ஸ்ரீவல்லபன் [நின்ற கோலத்தில் கிழக்கு நோக்கி சேவை]

தாயார் : செல்வத் திருக்கொழுந்து நாச்சியார் வாத்ஸல்யவல்லி

விமானம் : சதுரங்க கோல விமானம்

தீர்த்தம் : கண்டாகர்ண தீர்த்தம், பம்பாநதி

மங்களாசாசனம் : திருமங்கையாழ்வார் 11 பாசுரங்கள், நம்மாழ்வார் 11 பாசுரங்கள். மொத்தம் 22 பாசுரங்கள்.

விசேடம் : கண்டாகர்ணனுக்கு பேறு அளித்ததலம். இச்சந்நிதியில் சுதர்சன சக்கரம் ஸ்தாபிக்கப்பட்டுள்ளது.

**66. சீராரும் செல்வத் திருக்கொழுந்து கேள்வனவன்**
**பேராளன் கோலப் பிரான்துளவத்-தாராளன்**
**வல்லவாழ் நின்றருளும் வல்லபன்தாள் பற்றுவார்க்கு**
**இல்லையெஞ் ஞான்றும் இடர்.**

எஞ்ஞான்றும் - எப்பொழுதும், இடர் - துன்பம்

## 9. திருவண்வண்டூர் (திருவமுண்டூர்)

இத்தலம் செங்கண்ணூரிலிருந்து (மார்க்கம் 64ல் காண்க) வடக்கே 6 கி.மீ. தொலைவில் உள்ளது. செங்கண்ணூருக்கும் திருவல்லாவுக்கும் இடையில் எரிமேலிக் கரைப் பாதையில் 2 கி.மீ. தூரத்தில் உள்ளது.

மூலவர் : பாம்பணையப்பன், கமலநாதன் [மேற்கு நோக்கி நின்ற கோலம்.]

தாயார் : கமலவல்லி நாச்சியார்

விமானம் : வேதாலய விமானம்

தீர்த்தம் : பம்பாதீர்த்தம், பாபநாசதீர்த்தம்.

மங்களாசாசனம் : நம்மாழ்வார் 11 பாசுரங்கள்

விசேடம் : இக்கோயிலை நகுலன் புதுப்பித்ததாக வரலாறு. பெருமாள் மார்கண்டேயருக்கும் நாரதருக்கும் பிரத்யட்சமானவர்.

67. **கமலவல்லி மேவும் கடல்மேனி யம்மான்**
**அமலனவன் பாம்பணை யப்பன்-கமலநாதன்**
**தேனார் பொழில்சூழ் திருவண்வண் டூர்நின்ற**
**வானோர் பெருமான்தாள் வாழ்த்து.**

## 10. திருவாட்டாறு

நாகர்கோயில்-திருவனந்தபுரம் பஸ்மார்க்கத்தில் தொடுவெட்டி என்ற இடத்தில் இறங்கி அங்கிருந்து வேறு பஸ்ஸில் 9 கி.மீ. தூரம் வடக்கே சென்றால் இவ்வூரை அடையலாம். நாகர்கோயிலியிருந்து சுமார் 30 கி.மீ. தொலைவில் உள்ளது. பஸ் வசதி உண்டு.

மூலவர் : ஆதிகேசவப் பெருமாள் [புஜங்கசயனத்தில் மேற்கு நோக்கிய சேவை.]

தாயார் : மரகதவல்லி நாச்சியார்

விமானம் : அஷ்டாங்க விமானம், அஷ்டாக்ஷர விமானம்

தீர்த்தம் : கடல் வாய்த்தீர்த்தம், வாட்டாறு, ராமதீர்த்தம்

மங்களாசாசனம் : நம்மாழ்வார் 11 பாசுரங்கள்

விசேடம் : சந்திரனும், பரசுராமனும் பேறு பெற்ற தலம். இங்கு பெருமாளை திருவனந்தபுரத்தைப் போலவே 3 வாசல்களில் தரிசிக்க வேண்டும். இத்தலத்தைச்சுற்றி ஆறு வட்ட வடிவில் செல்வதால் 'வாட்டாறு' என்ற பெயர் ஏற்பட்டது.

68. **அண்டரிடர் தீர்த்தருள்செய் ஆதிகேச வப்பெருமான்**
**வண்டுளவத் தார்மார்பன் வாட்டாற்றில் -கண்டுயில்வோன்**
**மல்லையட்ட மாயோன் மரகதவல் லிக்கினியன்**
**எல்லையில்சீர் மாலவனை ஏத்து.**

மல் - மற்போர்செய்பவன் அட்டல் - அழித்தல்
இங்கு கேசி என்ற அசுரனை மற்போரில் அழித்த பெருமாளுக்கு ஆதிகேசவன் என்று பெயர்.

## 11. திருவித்துவக்கோடு (திருவிஞ்சிக்கோடு)

இது ஷோரனூர் - கள்ளிக்கோட்டை மார்க்கத்தில் உள்ள பட்டாம்பி ரயில் நிலையத்திலிருந்து 3 கி.மீ. தூரமுள்ளது. ஷோரனூரிலிருந்து 12 கி.மீ. தூரத்தில் உள்ளது. கோயில் பாரதப்புழை ஆற்றங்கரையிலுள்ளது. பஸ் வசதி உண்டு.

மூலவர் : உய்யவந்தபெருமான், அபயப்பிரதன் [தெற்கு நோக்கி நின்ற கோலம்]

தாயார் : வித்துவக்கோட்டு வல்லி, பத்மபாணி நாச்சியார்

விமானம் : தத்துவ காஞ்சன விமானம்

தீர்த்தம் : சக்கர தீர்த்தம்

மங்களாசாசனம் : குலசேகராழ்வார் 10 பாசுரங்கள்

விசேடம் : அம்பரீஷன் முத்தியடைந்த தலம். பஞ்ச பாண்டவர்கள் ஐவரும் சேர்ந்து சேவித்ததலம்.

**69. பத்துடையன் பர்க்கெளியன் பத்மபாணி தங்கேள்வன்
வித்துவத்கோட் டம்மான் விறல்மாயன்-இத்தலத்தோர்
உய்யவந்த யெம்பெருமான் ஒண்கழலைப் போற்றிநிதம்
துய்யமலர்த் தூவித் தொழு.**

பத்து - பற்று பக்தி
விறல் - வெற்றி, பெருமை, வலிமை, வீரம்
சிறப்பு என்று பொருள்
ஒண்கழல் - ஒளி பொருந்திய திருவடி

## 12. திருக்கடித்தானம்

திருவல்லாவிலிருந்து கோட்டயம் செல்லும் சாலையில் 8 கி.மீ. தொலைவில் உள்ள செங்கணாஞ்சேரிக்குச் சென்று அங்கிருந்து 3 கி.மீ. சென்றால் இத்தலத்தை அடையலாம்.

மூலவர் : அற்புத நாராயணன்,அம்ருதநாராயணன்
கிழக்கு நோக்கி நின்ற நிலை

தாயார் : கற்பகவல்லி

விமானம் : புண்ணியகோடி விமானம்

தீர்த்தம் : பூமி தீர்த்தம்

மங்களாசாசனம் : நம்மாழ்வார் 11 பாசுரங்கள்.

விசேடம் : இத்தலத்து பெருமாளை சகாதேவன் பிரதிஷ்டை செய்ததாக கூறப்படுகிறது. ருக்மாங்கதன் என்ற மன்னனுக்கு பெருமாள் பிரத்யட்சமாகி சேவை சாதித்ததலம்.

**70. கற்பக வல்லிகேள்வா! காயா மலர்வண்ணா!
அற்புத நாரணனே! அண்டரேத்தும்-நற்றுளவா!
தெள்ளமுதே! தேனே! திருக்கடித்தா னத்தாயென்
உள்ளத்துள் என்றும் உறை.**

## 13. திருவாறன்விளை (ஆரம்முளா)

செங்கண்ணூரிலிருந்து கிழக்கே சுமார் 10 கி.மீ. தொலைவில் உள்ளது. (மார்க்கம் 64 காண்க) பேருந்து வசதி உண்டு.

மூலவர் : திருக்குறளப்பன் [கிழக்கு நோக்கி நின்று சேவை]

தாயார் : பத்மாஸநி நாச்சியார்

விமானம் : வாமன விமானம்

தீர்த்தம் : வேதவியாச சரஸ், பம்பா தீர்த்தம்

மங்களாசாசனம் : நம்மாழ்வார் 11 பாசுரங்கள்

பேறுபெற்றோர் : பிரம்மா, வேத வியாசர்

விசேடம் : அர்ச்சுனனால் பிரதிஷ்டை செய்யப்பட்ட தலமென்பர். பிரம்மாவுக்கு வேதங்களை மீட்டுக்கொடுத்த தலம்.

**71. பத்தர்க் கருளபரமன் பத்மாச நிக்கொழுநன்
வித்தகனாம் ஆறன் விளைநின்ற -நித்தியன்
தேவாதி தேவன் திருக்குறளப் பன்கழலை
ஓவாதென் நெஞ்சமே உன்னு.**

**வித்தகன் - வியத்தகு தன்மையுடையவன்
நித்தியன்-இறைவன்,
ஓவாது - இடைவிடாமல் எப்பொழுதும், உன்னு - நினை**

மலைநாட்டுத் திருப்பதிகள்
13ம் நிறைவு பெற்றது.

# IV. நடுநாட்டுத் திருப்பதிகள் - 2

## 1. திருவயிந்திரபுரம் (அயிந்தை)

சென்னையிலிருந்து கடலூருக்கு பஸ்ஸில் வந்துபின் அங்கிருந்து மேற்கே 6 கி.மீ. தூரம் சென்றால் இத்தலத்தை அடையலாம்.

மூலவர் : தெய்வநாயகன் [கிழக்கு நோக்கி நின்ற நிலை]

உத்ஸவர் : மூவராகிய ஒருவன், தேவநாதன் , அடியவர்க்கு மெய்யன்

தாயார் : ஹேமாம் புஜவல்லி, வைகுண்ட நாயகி

விமானம் : சந்திர விமானம், சுத்தசத்துவ விமானம்

தீர்த்தம் : கருட நதி, சந்திர தீர்த்தம், சேஷ தீர்த்தம்

மங்களாசாசனம் : திருமங்கையாழ்வார் 10 பாசுரங்கள்

விசேடம் : அயிந்தன்-[ஆதிசேடன்] வழிபட்ட தலமானதால் அயிந்தரபுரமென்றாயிற்று. ஸ்ரீ தேசிகன் தவம் செய்த தலம். கோயிலுக்கு எதிரில் ஔடதகிரி என்ற சிறிய குன்றின்மேல் ஹயக்ரீவர் சந்நிதி உள்ளது. பேறுபெற்றோர் - சந்திரன், கருடன்.

72. **தேவரும்வந் தேத்தும் திருவயிந்தை மேவிநின்றாய்**
**மூவரு மாகியவோர் மூர்த்தியெனும்-தேவநாதா!**
**செய்யவளாம் அம்புயைதோள் சேர்தெய்வ நாயகனே!**
**உய்யவருள் செய்வாய் உகந்து.**

செய்யவள்- இலட்சுமி, அம்புயை - திருமகள்

## 2. திருக்கோவலூர் (கிருஷ்ணாரண்யக்ஷேத்ரம்)

விழுப்புரம்-காட்பாடி ரயில் மார்க்கத்தில் திருக்கோவிலூர் ஸ்டேஷனிலிருந்து தெற்கே 3 கி.மீ. தொலைவில் உள்ளது. பெண்ணையாற்றின் தென்கரையிலுள்ளது. தமிழகத்தின அனைத்து பெரிய நகரங்களிலிருந்து பஸ் வசதி உண்டு.

மூலவர் : திரிவிக்கிரமன் [வலது திருவடியை உயரே தூக்கிய நிலையில் கிழக்கு நோக்கி நின்ற திருக்கோலம்]

| | |
|---|---|
| உத்ஸவர் | : ஆயனார், கோவலன் [கோபாலன்] |
| தாயார் | : பூங்கோவல் நாச்சியார் |
| உத்ஸவர் | : புஷ்பவல்லி |
| விமானம் | : ஸ்ரீகர விமானம் |
| தீர்த்தம் | : பெண்ணையாறு, கிருஷ்ணதீர்த்தம், சக்கர தீர்த்தம் |

| | | |
|---|---|---|
| மங்களாசாசனம் : | திருமங்கையாழ்வார் | 18 பாசுரங்கள் |
| | பொய்கையாழ்வார் | 2 பாசுரங்கள் |
| | பூதத்தாழ்வார் | 1 பாசுரம் |
| | மொத்தம் | 21 பாசுரங்கள் |

விசேடம் : முதலாழ்வார்கள் [பொய்கையாழ்வார், பூதத்தாழ்வார், பேயாழ்வார்] மூவரும் ஓர் இரவில் இடைகழியில் சந்தித்தபோது பெருமாள் காட்சிதர சேவித்து 3 திருவந்தாதிகளைப் பாடியதலம். மூலவர் வலக்கையில் சங்கும், இடக்கையில் சக்கரமும் உள்ளது. பெருமாளை சேவித்து பேறு பெற்றோர் மகாபலிசக்ரவர்த்தி, மிருகண்ட முனிவர் சௌனகர், காஸ்யபர், காலவ முனிவர், இந்திரன், பிரம்மா, குசத்வஜன், முதலாழ்வார்கள் ஆகியோர். மகாபலியின் கர்வத்தை அடக்கி ஆட்கொண்ட தலம்.

இத்தலம் பஞ்ச கிருஷ்ணாரண்ய க்ஷேத்திரங்களில் ஒன்று. மற்றவை. திருக்கண்ணங்குடி, திருக்கவித்தலம், திருக்கண்ணபுரம், திருக்கண்ணமங்கை ஆகியன.

73. **மூவடிமண் நீரேற்று மூதண்டம் முட்டநின்று**
**சேவடி நீட்டிச அளந்த-மாவடிவன்**
**ஓங்கோத வண்ணன் உயர்திரி விக்கிரமன்**
**பூங்கோவ லாயன்தாள் போற்று.**

ஓங்கோதம் - பெருமையுடைய சிறந்த கடல்
மூதண்டம்- அண்டத்தின் (முகடு) உச்சி.

நடுநாட்டுத் திருப்பதிகள் 2 ம் நிறைவுற்றது.

# V. தொண்டை நாட்டுத் திருப்பதிகள் - 22

## 1. திருக்கச்சி (அத்திகிரி)

### அத்தியூர், காஞ்சிபுரம் (சின்னகாஞ்சி)

செங்கற்பட்டு - அரக்கோணம் ரயில்மார்க்கத்தில் உள்ள ஓர் ரயில்வேஸ்டேஷன் சென்னையிலிருந்து நேராக பஸ்வசதி உண்டு.

மூலவர் : வரதராஜன், பேரருளாளன், தேவாதிராஜன் தேவப்பிரான் [மேற்கு நோக்கி நின்ற நிலை]

தாயார் : பெருந்தேவித்தாயார் [தனிக்கோயில்]

விமானம் : புண்ணியகோடி விமானம்

தீர்த்தம் : வேகவதி, அனந்தசரஸ், சேஷ, வராக, பிரம்ம, பத்ம அக்கினி, குசல முதலிய தீர்த்தங்கள்

மங்களாசாசனம் : திருமங்கையாழ்வார் 4, பூதத்தாழ்வார் 2, பேயாழ்வர் 1 ஆக 7 பாசுரங்கள்.

விசேடம் : வைகாசி விசாக கருட சேவை பிரசித்தம். ஐராவதமே மலையுருவில் உள்ளதால் அத்திகிரி என்ற பெயர் வந்தது.

பேறுபெற்றவர்கள்: பிருகு, நாரதர், ஆதிசேஷன், பிரம்மா, கஜேந்திரன், பொய்கையாழ்வார் அவதாரஸ் தலம். முத்தி தரும் 7 தலங்களில் இதுவும் ஒன்று.

74. **எத்திசையு மேத்தும் எழில்வரதன் கச்சிநகர்**
**அத்திகிரி நின்ற அருளாளன்-நித்தியனாம்**
**பேராயி ரத்தான் பெருந்தேவி தங்கேள்வன்**
**பாரேழும் உண்டான்தாள் பற்று.**

**அத்தி - யானை, கிரி - மலை**
**ஐராவதம் என்ற யானை**

## 2. திருஅட்டபுயகரம் (சின்ன காஞ்சி)

காஞ்சிபுரத்திலேயே வரதராஜபெருமாள் கோயிலிலிருந்து மேற்கே 2 கி.மீ. தொலைவில் உள்ள ஹாட்சன் பேட்டை தேரடிக்கு அருகில் உள்ளது.

மூலவர் : ஆதிகேசவப்பெருமாள், அஷ்டபுஜப் பெருமாள், கஜேந்திரவரதன், சக்கரதரர் [எட்டுகரங்களுடன் மேற்கு நோக்கி நின்ற திருக்கோலம்]

தாயார் : அலர் மேல் மங்கை, பத்மாஸநி, புஷ்பவல்லி.

விமானம் : ககநாக்ருதி, சக்ராக்ருதி விமானம்

தீர்த்தம் : கஜேந்திர புஷ்கரணி

மங்களாசாசனம் : திருமங்கையாழ்வார் 11 பாசுரங்கள், பேயாழ்வார் 1 பாசுரம்

விசேடம் : மூலவர் 8 கரங்களுடன் 8 ஆயுதங்கள் தாங்கி நிற்கிறார். வலது 4 கரங்களில் சக்கரம்,கத்தி, புஷ்பம், அம்பும், இடது 4 கரங்களில் சங்கு, வில், கேடயம் , கதையும் ஏந்தியுள்ளார். கஜேந்திரன் என்ற யானையை முதலையிடமிருந்து காத்தருளிய தலம்.

**75. ஆரணங்கள் போற்றும் அலர்மகள் நாயகனை**
**வாரணத்தைக் காத்த வரதனெனும் -நாரணனை**
**அட்ட புயகரத்தான் ஆதிகேச வன்தன்னை**
**எட்டெழுத்து மந்திரத்தால் ஏத்து.**

**ஆரணங்கள் - வேதங்கள். வாரணம்- யானை**
**எட்டெழுத்து மந்திரம் - ஓம் நமோ நாராயணாய**
**அலர்மகள் - அவர்மேல்மங்கை, திருமகள்.**

## 3. திருத்தண்கா (தூப்புல்) (சின்னகாஞ்சிபுரம்)

இக்கோயில் சின்னகாஞ்சிபுரத்தில் உள்ள அட்டபுய கரத்திலிருந்து மேற்கே சுமார் $\frac{1}{2}$ கி.மீ தூரத்தில் உள்ளது. (மார்க்கம் 75 ல் காண்க)

மூலவர் : தீபப் பிரகாசர், விளக்கொளிப்பெருமாள் திவ்யப் பிரகாசர் [மேற்கு திசை நோக்கி நின்ற திருக்கோலம்]

தாயார் : மரகதவல்லி

விமானம் : ஸ்ரீகர விமானம்

தீர்த்தம் : சரஸ்வதி தீர்த்தம்

மங்களாசாசனம் : திருமங்கையாழ்வார் 2 பாசுரங்கள்

விசேடம் : சுவாமிதேசிகன் அவதாரத்தலம். பிரம்மாவின் யாகத்தைக் கெடுக்கும் நோக்கத்தோடு அசுரர்களுடன சேர்ந்து சரஸ்வதி உலகத்தில் இருளை உண்டாக்கிவிட பெருமாள் பேரொளியாய் தோன்றி இருட்டைப் போக்கிய தால் பெருமாளுக்கு தீபப்பிரகாசர் என்றும், விளக்கொளி என்றும் பெயர் வழங்கலாயிற்று.

76. **மண்ணளந்த மாயன் மரகதவல் லிக்கொழுநன்**
**விண்ணவர்தம் பெம்மான் விளக்கொளியெம் - புண்ணியனாம்**
**தண்டுளவத் தார்மார்பன் தண்காவில் நின்றருளும்**
**விண்டுவின் தாளை விரும்பு**

கொழுநன் - கணவன்

## 4. திருவேளுக்கை (சின்ன காஞ்சி)

இத்தலம் சின்னகாஞ்சிபுரத்திலேயே அட்டபுயகரத்திலிருந்து தென்மேற்கே 1 கி.மீ. தூரத்தில் உள்ளது. விளக்கொளி பெருமாள் கோவிலுக்கு தென்பாலுள்ளது.

மூலவர் : அழகிய சிங்கர், நரஸிம்மர், முகுந்த நாயகன் [மேற்கு நோக்கி நின்ற நிலை]

தாயார் : வேளுக்கைவல்லி, அமிர்தவல்லி.

விமானம் : கனக விமானம்

தீர்த்தம் : கனகசரஸ், ஹேமசரஸ்

மங்களாசாசனம் : பேயாழ்வார் 3 பாசுரங்கள்,
திருமங்கையாழ்வார் 1 பாசுரம்

விசேடம் : வேள்-ஆசை. நரசிம்மன் ஆசையுடன் வசிக்கும் தலமனதால் வேளிருக்கை [வேளுக்கை] என்ற பெயர் பெற்றது. மிகச்சிறிய கோயில். பேறு பெற்றவர்-பிருகு முனிவர்.

77. **அண்டரிடர் தீர்த்த அழகிய சிங்கனவன்**
**பண்டவுணன் மார்விடந்த பைந்துளவன்-மண்டுபுகழ்**
**வேளுக்கை வல்லி விழைமுகுந்த நாயகன்தன்**
**தாளுக்கா ளாதல் தலை.**

தலை-சிறந்தது, இடத்தல் - பிளத்தல்

## 5. **திருப்பாடகம்** (பெரிய காஞ்சிபுரம்)

பாண்டவ தூதப் பெருமாள் சந்நிதி என்ற இக்கோயில் பெரிய காஞ்சிபுரத்தில் கங்கைகொண்டான் மண்டபத்தின் அருகில் உள்ளது.

மூலவர் : பாண்டவதூதர். [கிழக்குநோக்கி வீற்றிருக்கும் நிலை] மிகப்பெரிய திருமேனி - [விசுவரூபம்]

தாயார் : ருக்மணி, சத்யபாமா

விமானம் : சக்கரவிமானம், வேதகோடி விமானம்

தீர்த்தம் : மத்சய தீர்த்தம்

விசேடம் : பெருமாள் ஜனமே ஜய மன்னனுக்கும், ஹாரித முனிவருக்கும் சேவையளித்தார்.

மங்களாசாசனம் : திருமழிசையாழ்வார் 2 பாசுரங்கள்
திருமங்கையாழ்வார் 21, பூதத்தாழ்வார்
பேயாழ்வார் 1 ஆக 6 பாசுரங்கள்

78. **பார்த்தன்தன் தேரூர்ந்து பாரதங்கை செய்துகந்த**
**மூர்த்தியவன் காரேய் முகில்வண்ணன்- சீர்த்திமிகு**
**பாடகத்தே வீற்றருளும் பாண்டவ தூதன்செய்**
**நாடகத்தை யாரறிவார் நன்கு.**

தேரூர்ந்து - தேரோட்டிச் செல்லுதல்
கைசெய்தல் - நடத்துதல்
பாரதங்கை செய்தல் - பாரதயுத்தத்தை நடத்தி
பாண்டவரை வெற்றி பெறச் செய்தவன்

## 6. திருநீரகம் (பெரிய காஞ்சிபுரம்)

பெரிய காஞ்சிபுரத்தில் உலகளந்த பெருமாள் (ஊரகம்) கோயிலின் வடக்குப் பிரகாரத்தில் இச்சந்நிதி உள்ளது.

மூலவர் : இல்லை.
உத்ஸவர் : ஜெகத்சப் பெருமாள் [தெற்கு நோக்கி நின்ற கோலம்]
தாயார் : நிலமங்கை வல்லி.
விமானம் : ஜெகதீஸ்வர விமானம்
தீர்த்தம் : அக்ரூர தீர்த்தம்
மங்களாசாசனம் : திருமங்கையாழ்வார் 1 பாசுரம்
விசேடம் : பெருமாள் அக்ரூரருக்கு பிரத்யட்சம் மிகச்சிறிய சந்நிதி.

79. **நீரகத்துள் நின்றான் நிலமங்கை வல்லியொடு**
**சீரகத்தை நல்கும் செகதீசன்-பேரகத்தான்**
**தாரகன்நல் தாயனையான் தாள்பணிவார் தம்வினையின்**
**வேரகற்றி காப்பான் விழைந்து.**

(சீர + அகம்)
சீரகம் - வீடுபேறு, முத்தி. பேரகம் - நன்மனம்
தாரகன் - ஆதாரமானவன்

## 7. திருநிலாத்திங்கள் துண்டம்

### (பெரிய காஞ்சிபுரம்)

இச்சந்நிதி பெரிய காஞ்சிபுரம் ஏகாம் பரேஸ்வரர் கோயிலின் முதல் பிரகாரத்தில் உள்ளது. மிகச் சிறிய சந்நிதி.

மூலவர் : நிலாத்திங்கள் துண்டத்தான், சந்திர சூடப்பெருமாள். [மேற்கு நோக்கி நின்ற கோலம்]

தாயார் : நேரொருவரில்லா வல்லி, நிலாத்திங்கள் துண்டத் தாயார்.

விமானம் : சூரிய விமானம்

தீர்த்தம் : சந்திர புஷ்கரணி

மங்களாசாசனம் : திருமங்கையாழ்வார் 1 பாசுரம்

விசேடம் : மூலவர் ஏழுதலை நாகத்தை குடையாகக் கொண்டு மேற்கு நோக்கி நின்றருளும் நிலையிலுள்ளார். பெருமாள் பார்வதியின் வேண்டுகோளை ஏற்று சிவனின் தலையிலிருந்து நிலாவின் கிரணங்களைத்துண்டித்து பார்வதி தவமிருந்த மாமரத்தை தழைக்கச் செய்த பெருமாள் வாமனார். அதனால் பெருமாளுக்கு நிலாத் திங்கள் துண்டத்தான் என்று பெயர் உண்டாயிற்று.

80. **நீரெரிகால் நீள்பார் நெடுவானாய் நின்றிட்டான்**
**நேரொருவ ரில்லாள்தன் நெஞ்சுகந்த - காருருவன்**
**நேமியங் கையன் நிலாத்திங்கள் துண்டத்தான்**
**நாமங்கள் தம்மை நவில்.**

**நீர் - தண்ணீர், எரி-நெருப்பு, கால் - காற்று**
**பார் - பூமி, வான்-ஆகாயம் - (பஞ்சபூதங்கள்)**
**கார்-மேகம், நேமி - சக்கரம், நவில்-சொல்லு**
**நேரொருவர் இல்லாள்-ஒருவரும் இவருக்கு சமம்இல்லை**

## 8. திருஊரகம் ( பெரிய காஞ்சிபுரம்)
## (உலகளந்த பெருமாள் கோயில்)

இது பெரிய காஞ்சிபுரம் பேருந்து நிலையத்துக்கு அருகாமையில் உள்ளது.

மூலவர் : திரிவிக்கிரமன், உலகளந்த பெருமாள். [மேற்கு நோக்கி நின்ற கோலம்.]

உத்ஸவர் : பேரகத்தான்

தாயார் : அமுதவல்லி [அமிர்த வல்லி]

விமானம் : சார ஸ்ரீகர விமானம்

தீர்த்தம் : நாக தீர்த்தம் [சேஷ தீர்த்தம்]

மங்களாசாசனம் : திருமழிசையாழ்வார் 2 பாசுரங்கள், திருமங்கையாழ்வார் 4 பாசுரங்கள்

விசேடம் : மூலவர் மிகப்பெரிய திருமேனி. இடது காலை உயரே தூக்கிய நிலை. மாபலியின் தலைமீது ஓர் அடியை வைத்து பாதாள வாழ்வளித்தவர். ஆதிசேஷனுக்கு பிரத்யட்சம். இங்கு நீரகம், காரகம், கார்வானம் ஆகிய 3 தலமுள்ளது.

81. **மாவலிபால் மூவடிமண் மாணுருவில் நீரேற்று**
**மூவுலகும் நீண்டளந்த மூர்த்தியவன் - பூவுலகில்**
**ஊரகத்துள் நின்றான் உயரமுத வல்லிகேள்வன்**
**பேரகத்தான் பெற்றியமையைப் பேசு.**

மாணுறு - குள்ளமான வடிவம்

ஏற்றல் - இரத்தல், பெற்றிமை-பெருமை, குணம்

நீரேற்றல் - நீர்வார்க்கப்பட்டுதானமாக பெறுதல்

உயர் - உயர்ந்த, மேன்மை, மிகச்சிறந்த

## 9. திருவெஃகா (சின்ன காஞ்சிபுரம்)

இது சின்னகாஞ்சிபுரம் ஆடிசன் பேட்டையிலுள்ள அட்டபுயகரப் பெருமாள் கோயிலுக்கு வடபுறம் ½ கி.மீ. தொலைவில் உள்ளது.

மூலவர் : சொன்னவண்ணம் செய்தபெருமாள், யதோக்தகாரி [புஜங்க சயனம். மேற்கு நோக்கிய திருமுகம்]

தாயார் : கோமளவல்லி நாச்சியார்.

விமானம் : வேதசார விமானம்

தீர்த்தம் : பொய்கைப்புஷ்கரணி

மங்களாசாசனம் : திருமழிசையாழ்வார் 3 பாசுரங்கள்
திருமங்கையாழ்வார் 6 பாசுரங்கள்
பொய்கையாழ்வார் 1 பாசுரம்
பேயாழ்வார் 3 பாசுரங்கள்
நம்மாழ்வார் 1 பாசுரம்

விசேடம் : பொய்கையாழ்வார் அவதாரஸ்தலம். கணிக்கண்ணன் என்ற தன் சீடனுக்காக திருமழிசை ஆழ்வார சொன்னபடி இப்பெருமாள் செய்ததினால் இவருக்கு சொன்னவண்ணன் செய்த பெருமாள் என்று பெயர் உண்டாயிற்று.

**82. தொண்டர்க்காய் பத்திசாரர் சொன்னவண்ணம் செய்தபிரான்
வண்டுளவன் கோமள வல்லிமேவும்-புண்டரிகன்
ஞாலமுய்ய வெஃகாவுள் நாகணைமேல் பள்ளிகொண்ட
மாலவனை ஏத்தி மகிழ்.**

தொண்டன் - சீடன் (கணிக்கண்ணன்)

பத்திசாரர் - திருமழிசையாழ்வார்

## 10. திருக்காரகம் (பெரிய காஞ்சிபுரம்)

இச்சந்நிதி பெரிய காஞ்சிபுரத்திலுள்ள (ஊரகம்) உலகளந்பெருமாள் கோயிலின் தெற்குப் பிரகாரத்தில் இருக்கிறது. (மார்கம் 81 காண்)

மூலவர் : கருணாகரப்பெருமாள் [தெற்கு நோக்கி நின்ற திருக்கோலம்]

தாயார் : பத்மாமணி நாச்சியார், ரமாமணி நாச்சியார்

விமானம் : வாமன விமானம், ரம்ய விமானம்

தீர்த்தம் : அக்ராய தீர்த்தம்

மங்களாசாசனம் : திருமங்கையாழ்வார் 1 பாசுரம்.

பேறுபெற்றவர் : கார்க்க முனிவர்

83. **பண்டுலகம் உண்டுமிழ்ந்தோன் பத்மா மணிகேள்வன்**
**தண்டளவத் தார்மார்பன் தண்ணளியன்-அண்டர்கோன்**
**காரகத்தே நின்றான் கருணா கரப்பெருமான்**
**பாரகத்தோ ருய்யப் பரிந்து.**

தண்ணிளியன் - குளிர்ந்த அருளையுடையவன்
அண்டர்கோன் - தேவதேவன்
பரிந்து - இரக்கத்தோடு, அன்போடு
பண்டு - முற்காலத்தில்

## 11. திருக்கார்வானம் (பெரிய காஞ்சிபுரம்)

இதுவும் பெரிய காஞ்சிபுரத்தில் (ஊரகம்) உலகளந்த பெருமாள் கோயிலின் மேற்குப் பிரகாரத்தில் உள்ளது. (மார்க்கம் 81 காண்க)

மூலவர் : கள்வர் [மேற்கு முகமாக நின்ற திருக்கோலம்]

தாயார் : கமலவல்லி [தாமரையாள்]

விமானம் : புஷ்கல விமானம்

தீர்த்தம் : கௌரிதடாகம்

மங்களாசாசனம் : திருமங்கையாழ்வார் ஒரு பாசுரம்

84. நீர்வானாய் காலழலாய் நீள்பாராய் நின்றருளும்
கார்வானக் கள்வன் கமழ்துளவத்—தார்மார்பன்
கார்முகில் வண்ணன் கமலவல்லி நாயகன்தன்
வார்கழலை என்றும் வணங்கு.

நீர் - தண்ணீர், வான்-ஆகாயம், அழல்-நெருப்பு
பார் - பூமி, கால் - காற்று (பஞ்சபூதங்கள்)
வார்கழல் - பெருமை பொருந்திய பாதம்.

## 12. திருக்கள்வனூர் (பெரியகாஞ்சிபுரம்)

இச்சந்நிதி பெரியகாஞ்சிபுரத்தில் காமாட்சியம்மன் கோயிலுக்குள் அம்மன் கர்ப்பக்கிரகத்துக்கு வலது பக்கத்தில் இருக்கிறது. அதாவது அர்த்தமண்டபத்தின் நுழைவாயிலின் இடது புறச்சுவரில் உள்ள மாடத்தில் உள்ளது.

மூலவர் : ஆதிவராகப்பெருமாள் [மேற்க திசை நோக்கி நின்ற திருக்கோலம்]

தாயார் : அஞ்சிலை வல்லி நாச்சியார்

விமானம் : வாமன விமானம்

தீர்த்தம் : நித்திய புஷ்கரணி

மங்களாசாசனம் : திருமங்கையாழ்வார் 1 பாசுரம்

85. அந்தமாதி இல்லான் அகிலந் தனையிடந்தோன்
கந்தங் கமிழ்துளவன் கள்வனூர் - வந்துநின்றான்
அஞ்சிலை வல்லிமேவும் ஆதிவரா கன்கழலை
நெஞ்சமே என்றும் நினை.

ஆதியந்தம் - முதலும் முடிவும். அகிலம் - உலகம், பூமி
இடந்தோன் - குத்தி எடுத்தல் வராகம் - பன்றி (பெருமாள் பன்றியுருக்கொண்டு கடலுக்குள் அமிழ்ந்திருந்த பூமியை தன்னுடைய கொம்பினால் குத்தி எடுத்து மேலே கொண்டு வந்து நிலைப்படுத்தினார்.)

## 13. திருப்பவளவண்ணம் (பெரிய காஞ்சிபுரம்)

இது பெரிய காஞ்சிபுரம் ரயில்வே ஸ்டேஷனுக்கு அருகில் உள்ளது. வைகுண்ட பெருமாள் கோயிலுக்கும் சமீபத்தில் உள்ளது. இதன்எதிரே பச்சை வண்ணன் சந்நிதியும் இருக்கிறது. பவளவண்ணன் பச்சை வண்ணன் இருசந்நிதி களையும் சேர்த்தே ஒரே திவ்ய தேசமாக சேவிக்கப்படுகிறது.

மூலவர் : பவளவண்ணன் [மேற்கு நோக்கி நின்ற நிலை]

தாயார் : பவளவல்லி [தனிக்கோயில்]

விமானம் : பிரவாள விமானம்

தீர்த்தம் : சக்கர தீர்த்தம்

பேறுபெற்றோர் : அஸ்விநிதேவதை, பார்வதி

மங்களாசாசனம் : திருமங்கையாழ்வார் 1 பாசுரம்

**86. பவளவல்லி கேள்வன் பவளவண்ணன் பண்டு**
**கவளமால் யானைகொன்ற கண்ணன் - பவளவாயன்**
**பச்சை வணப்பெருமான் பத்தரிடர் தீர்த்தருளும்**
**அச்சுதனின் தாளே அரண்.**

களவமால் - மதங்கொண்ட கம்சனின் குவலயா பீடமென்னும் யானை.

அரண் - பாதுகாப்பு, தாள் - திருவடி

## 14. திருபரமேச்சுர விண்ணகரம்
(பெரிய காஞ்சிபுரம்)

இது பெரிய காஞ்சிபுரம் ரயில் நிலையத்தின் அருகாமையில் உள்ளது. உலகளந்த பெருமாள் கோயிலுக்கு கிழக்கே ½ கி.மீ. தொலைவிலும் பேருந்து நிலையத்திலிருந்து வடகிழக்காக ½ கி.மீ. தொலைவிலும் உள்ளது.

மூலவர் : பரமபதநாதன், வைகுந்தநாதன் [மேற்கு நோக்கி வீற்றிருக்கும் நிலை]

தாயார் : வைகுந்தவல்லி [தனிக்கோயில்]

விமானம் : முகுந்த விமானம் [அஷ்டாங்க விமானம்]

தீர்த்தம் : ஐரம்மததீர்த்தம், விரஜா தீர்த்தம்

பேறுபெற்றோர் : பல்லவராஜன்

மங்களாசாசனம் : திருமங்கையாழ்வார் 10 பாசுரங்கள்

விசேடம் : விமானம் 3 அடுக்காக உள்ளது. கீழடுக்கில் பெருமாள் வீற்றிருக்கும் நிலை. மத்தியில் ஸ்ரீ தேவியுடன் ஸ்ரீ ரங்கநாதரின் சயனகோலம். மேலடுக்கில் நின்ற நிலை.

**87. வையமொடு வானேத்தும் வைகுந்தம் விட்டிறங்கி**
**வையமுய்ய வைகுந்த வல்லியொடு - துய்ய**
**பரமேச் சுரவிண் ணகரம் அமர்ந்த**
**பரமபத நாதன்தாள் பற்று.**

குறிப்பு:வரிசை எண் 74 முதல் 87 வரையிலான 14 திவ்ய தேசங்கள் காஞ்சிபுரம் நகரிலேயே உள்ளன என்பது குறிப்பிடத்தக்கது. (சின்ன காஞ்சிபுரத்தில் 5 கோயில்களும் பெரிய காஞ்சிபுரத்தில் 9 கோயில்களும் உள்ளன.)

## 15. திருபுட்குழி

காஞ்சிபுரத்திலிருந்து 10 கி.மீ. மேற்கே சென்னை-வேலூர் பஸ்மார்க்கத்தில் பாலு செட்டிசத்திரம் என்ற ஊருக்கு இடது புறமாக சிறிது தூரத்தில் உள்ளது.

மூலவர் : விஜயராகவப்பெருமாள்
[கிழக்கு நோக்கி வீற்றிருக்கும் நிலை]

தாயார் : மரகதவல்லித் தாயார் [தனிக்கோயில்]

விமானம் : விஜயகோடிவிமானம்

தீர்த்தம் : ஜடாயு தீர்த்தம்

மங்களாசாசனம் : திருமங்கையாழ்வார் 2 பாசுரங்கள்

விசேடம் : ஸ்ரீராமர் ஜடாயு என்ற பட்சிக்கு

முத்தியளித்த தலம். ஜடாயுவுக்கு தர்ப்பணம் செய்ய பூமியைக் கீறி தீர்த்தத்தை உண்டாக்கியதால் இத்தலத்திற்கு திருப்புட்குழி என்று பெயர் உண்டாயிற்று.

88. **புள்ளுக்கு வீடளித்தோன் புட்குழியுள் வந்தமர்ந்தோன்**
**உள்ளுவார்க் கென்றும் உவந்தருளும்-வள்ளலவன்**
**விண்ணோ ரிடர்தீர் விறல்விசய ராகவனை**
**நண்ணா ரடையார் நலம்.**

புள் - பட்சி (ஜடாயு என்ற கழுகு)
வீடு - மோட்சம், வீடுபேறு
விறல் - வெற்றி, பெருமை, வலிமை, வீரம் சிறப்பு என்று பல பொருள்படும்.

## 16. திருநின்றவூர்

இது சென்னை - அரக்கோணம்ரயில் மார்க்கத்தில் தின்னனூர் என்ற ரயில் நிலையத்திலிருந்து தெற்கே சுமார் 2 கி.மீ. தொலைவில் உள்ளது. சென்னை - பூந்தமல்லி - திருவள்ளூர் பஸ் மார்க்கம்.

மூலவர் : பக்தவச்சலப் பெருமாள், பத்தராவிப் பெருமாள் [கிழக்கு நோக்கி நின்ற நிலை]
தாயார் : சுதாவல்லி, [என்னைப் பெற்ற தாயார்]
விமானம் : ஸ்ரீநிவாச விமானம் [உத்பல விமானம்]
தீர்த்தம் : வருணபுஷ்கரணி, விருத்த க்ஷீர நதி
மங்களாசாசனம் : திருமங்கையாழ்வார 2 பாசுரங்கள்

விசேடம் : 'திரு'வாகிய இலட்சுமி இங்கு வந்து தங்கி அருள் புரிந்தமையால் இவ்வூருக்கு 'திருநின்றவூர்' என்று பெயர் வந்தது.

89. **பத்தராவி யென்னும் பரமபக்த வத்சலனை**
**நித்தியனாம் நின்மலன் நின்றவூர் - நித்திலத்தை**
**தூயமணி வண்ணன் சுதாவல்லி கேள்வனை**
**தூயமலர்த் தூவித் தொழு.**

**நித்தியன் - இறைவன், நின்மலன் - மாசிலா இறைவன் அழுக்கற்றவன்**

**நித்திலம் - முத்து**

## 17. திருஎவ்வுள் (திருவள்ளூர்)

சென்னை - அரக்கோணம் ரயில்மார்க்கத்தில் திருவள்ளூர் ஸ்டேஷனிலிருந்து சுமார் 5 கி.மீ. தூரத்தில் உள்ளது. சென்னையிலிருந்து பஸ்ஸில் சென்றால் கோயிலின் வாசலிலேயே இறங்கலாம்.

மூலவர் : வீரராகவப்பெருமாள் [புஜங்க சயனம்]

தாயார் : கனகவல்லி, வசுமதி [ தனிக்கோயில்]

விமானம் : விஜயகோடி விமானம்

தீர்த்தம் : ஹிருத்தாப நாசினி புஷ்கரணி

பேறுபெற்றோர் : சாலிகோத்திரமுனிவர், சதுர்முகன், சங்கரன்

மங்களாசாசனம் : திருமங்கையாழ்வார் 11 பாசுரங்கள், திருமழிசையாழ்வார் 1 பாசுரம்

விசேடம் : திருமால் சாலிகோத்திர கரிஷிக்கு காட்சியளித்தபோது உறைதற்குரிய உள் எவ்வுள் என்று வினவியதால் இத்தலத்திற்கு 'திருஎவ்வுள் ' என்ற பெயர் உண்டாயிற்று.

90. **கற்றார் பரவும் கனகவல் லிக்கினியன்**
**செற்றார் திறலழித்த செங்கண்மால்-பற்றாவான்**
**எவ்வுள் துயில் கொள் எழில்வீர ராகவனை**
**எவ்வம் களையநீ ஏத்து.**

**செற்றார் - எதிரிகள், திறல் - வலிமை**

**எவ்வம் - துன்பம், குற்றம், தீராநோய்**

## 18. திருநீர்மலை

சென்னை - தாம்பரம் பஸ் மார்க்கத்தில் பல்லாவரத்திலிருந்து மேற்கே 6 கி.மீ. தொலைவில் உள்ளது. டவுன் பஸ் வசதிகள் உண்டு. இங்கு ஒரு சிறிய மலை இருக்கிறது. மலையடிவாரத்தில் ஒரு கோயிலும் மலையின் மேல் மூன்று கோயில்களும் இருக்கின்றன.

I. மலை அடிவாரக்கோயில்

1.மூலவர் : நீர்வண்ணன், நீலமுகில்வண்ணன்
கிழக்கு நோக்கி நின்ற கோலம்

தாயார் : அணிமாமலர்மங்கை [தனிக்கோயில்]
[ஸ்ரீ ராமருக்கு தனிச்சந்நிதி இருக்கிறது.]

II.மலைமேல் கோயில்:

2. மூலவர் : [இருந்தான்] சாந்த நரசிம்மன்.
[கிழக்கு நோக்கி வீற்றிருக்கும் நிலை]

3. மூலவர் : [கிடந்தான்] அரங்கநாதன்
மாணிக்க சயனம், தெற்குநோக்கி சேவை.

தாயார் : ரங்கநாயகி [தனிக்கோயில்]

4. மூலவர் : திரிவிக்கிரமன் [நடந்தான்] கிழக்கு நோக்கி நின்ற கோலம்

விமானம் : தோயகிரி விமானம்

தீர்த்தம் : மணிகர்ணிகா தடாகம், க்ஷீரபுஷ்கரிணி, காருண்யபுஷ்கரிணி, ஸ்வர்ண புஷ்கரிணி என்ற நான்கு தீர்த்தங்கள் அடங்கியது

விசேடம் : வால்மீகி முனிவர் இங்குவந்து பெருமாளை சேவித்து பேறுபெற்றார். மற்றும் தொண்டைமான், பிருகு, மார்க்கண்டேயர் முதலானோரும் பேறுபெற்றவர் களாவர். மலைமீதும், மலையடிவாரத்திலும் நின்றான், இருந்தான், கிடந்தான், நடந்தான் என்ற பெயர்களில் 4 பெருமான்கள் உள்ளனர்.

மங்களாசாசனம் : திருமங்கையாழ்வார் 19 பாசுரங்களாலும் பூதத்தாழ்வார் 1 பாசுரத்தாலும் மங்களாசாசனம்

91. **நீர்வணனை ஆளரியை நீளரங்கத் தம்மானை**
**நீரேற்று நீண்டு நிமிர்ந்தானை-நீர்மலையில்**
**நின்றான் இருந்தான் கிடந்தான் நடந்தானை**
**என்றும் நினைந்துருகி ஏத்து.**

நீர்வண்ணன் (நின்றான்)
ஆளரி - நரசிம்மன் (இருந்தான்)
நீளரங்கன் - பெருமையுள்ள அரங்கன் (கிடந்தான்)
நீரேற்று நீண்டு நிமிர்ந்தான் - மாவலியிடம் குள்ள வடிவில் நீர்வார்க்கப்பட்டு மூவடிமண்ணை தானமாக ஏற்று பிறகு பெரிய உருக்கொண்டு நீண்டு உலகத்தை அளந்தவன்- திரிவிக்கிரமன் (நடந்தான்)

## 19. திருஇடவெந்தை (திருவிடந்தை)

சென்னையிலிருந்து - கோவளம் வழியாக மகாபலிபுரம் செல்லும் கிழக்குக்கடற்கரைச் சாலையில் சுமார் 40 கி.மீ. தொலைவில் உள்ளது. பஸ்வசதி உண்டு.

மூலவர் : லக்ஷ்மி வராகப்பெருமாள் [கிழக்கு நோக்கி நின்ற கோலம்]

உத்ஸவர் : நித்திய கல்யாணப்பெருமாள்

தாயார் : கோமளவல்லிநாச்சியார்

விமானம் : கல்யாணவிமானம்

தீர்த்தம் : கல்யாணதீர்த்தம், வராக தீர்த்தம்

மங்களாசாசனம் : திருமங்கையாழ்வார் 13 பாசுரங்கள்

விசேடம் : பெருமாள் பிராட்டியை இடப்புறத்தில் ஏந்தியுள்ள படியால் 'திரு இட எந்தை' எனப்பெயர் வந்தது. காலவமகிரிஷியின் 360 பெண்களையும் 360 நாள் கல்யாணம் செய்து கொண்டதால் பெருமாளுக்கு 'நித்தியக்கல்யாணன்' என்று பெயர் உண்டாயிற்று.

92. **இத்தலத்தோ ருய்ய இடவெந்தை நின்றபிரான்**
**நித்தியக் கல்யாணன் நீண்முடியன் - வித்தகனாம்**
**கோமள வல்லிகேள்வன் கோல வராகனெனும்**
**சாமள மேனியன்சீர் சாற்று.**

வித்தகன் - வியக்கத்தக்க தன்மையுடையவன்
சாற்று - சொல்லு.

## 20. திருக்கடல்மல்லை (மகாபலிபுரம்)

சென்னையிலிருந்து கிழக்குக் கடற்கரைச் சாலை மார்க்கத்தில் சுமார் 55 கி.மீ. தொலைவில் உள்ளது. செங்கற்பட்டிலிருந்து 25 கி.மீ. தூரத்தில் உள்ளது.

மூலவர் : தலசயனப் பெருமாள் [தரையில் புஜங்க சயனனாக கிழக்கு நோக்கி சேவை சாதிக்கிறார்]
உத்ஸவர் : உலகுய்ய நின்றான்
தாயார் : நிலமங்கை நாச்சியார் [தனிக்கோயில்]
விமானம் : ககனாக்ருதி விமானம்
தீர்த்தம் : புண்டரீக தீர்த்தம், கருடநதி
பேறுபெற்றவர் : புண்டரீக மகரிஷி
மங்களாசாசனம் : திருமங்கையாழ்வார் 26 பாசுரங்கள் பூதத்தாழ்வார் 1 பாசுரம்

விசேடம் : பூதத்தாழ்வார் அவதாரஸ்தலம். கலைச் சிற்பங்கள் நிறைந்த தலம். கடற்கரையிலும் இதே பெருமாள் பெயரில் ஒரு கோயில் இருக்கிறது.

93. **நிலமங்கை தோள்தோயும் நீலமேக வண்ணன்**
**உலகுய்ய நின்ற ஒருவன்-நலமருள்வான்**
**தண்கடல் மல்லைத் தலசயனன் தண்டுளவன்**
**ஒண்சுட ராழியான்சீர் ஓது.**

ஒருவன் - ஒப்பற்றவன்

## 21. திருவல்லிக்கேணி

சென்னை மாநகரில் மெரினா கடற்கரைக்கருகில் மேற்கே இச்சந்நிதி இருக்கிறது. இக்கோயிலில் 5 சந்நிதிகள் இருக்கின்றன.

1. மூலவர் : வேங்கடகிருஷ்ணன் ,ருக்மிணி பிராட்டியுடன், [பலராமன், ஸாத்யகி, அநிருத்தன், ப்ரத்யும்னன் இவர்களோடு நின்ற கோலத்துடன் கிழக்கு நோக்கி சேவையளிக்கிறார்]

உத்ஸவர் : பார்த்தஸாரதி

தாயார் : வேதவல்லித்தாயார் [தனிக்கோயில்]

2. மூலவர் : ரங்கநாதன், மன்னாதன் [புஜங்கசயனம்] கிழக்கு நோக்கிய திருமுகம்.

3. மூலவர் : ஸ்ரீராமன். சீதாபிராட்டி, இலட்சுமணன் பரதன், சத்ருக்கன், ஆஞ்சநேயருடன் நின்ற கோலத்தில் தென்திசை நோக்கி சேவை சாதிக்கிறார்.

4. மூலவர் : வரதராஜன், தேவப்பெருமாள் [கருடன் மீதமர்ந்த கோலத்தில் கிழக்கு நோக்கிய திருமுகம்.

5. மூலவர் : அழகிய சிங்கர் [தெள்ளிய சிங்கர்] வீற்றிருந்த கோலத்தில் மேற்கு நோக்கிய திருமுகம்.

வடமேற்குப் பக்கம் ஆண்டாள் சந்நிதியும் உள்ளது

விமானம் : ஆனந்த விமானம், பிரணவவிமானம், புஷ்பக விமானம், சேஷவிமானம், தைவிக விமானம்.

தீர்த்தம் : கைரவினிசரஸ் [அல்லிக்கேணி] இதில்

இந்திர, சோம, மீன, அக்கினி, விஷ்ணு என்ற ஐந்து தீர்த்தங்கள் சூழப்பட்டுள்ளதாக ஐதீகம்]

பேறுபெற்றவர்கள் : தொண்டைமான், சுமதிராஜன், அர்ஜுனன், பிருகுமகரிஷி, மார்க்கண்டேயர், மதுமான் ரிஷி, சப்தரோமா, அத்திரி மகரிஷி, ஜாஜலி மகரிஷி ஆகியோர்.

மங்களாசாசனம் : திருமங்கையாழ்வார் 10 பாசுரங்கள்
பேயாழ்வார் ........... 1 பாசுரம்
திருமழிசையாழ்வார் 1 பாசுரம்

விசேடம் : மூலவருக்கு 2 திருக்கரங்கள், வலது கையில் சங்கும், இடது கையில் கோலும் ஏந்தியுள்ளார். முகத்தில் பெரிய மீசையுடன் நிற்கிறார். கிருஷ்ணன் குடும்ப சமேதனாய் எழுந்தருளி இருப்பது இத்தலத்தில் மட்டுமே.

94. **பார்த்தன்தே ரூர்ந்தானும் பாம்பணையன் ரங்கநாதன்**
**சீர்த்தி மிகுவரதன் சீராமன் - சேர்த்தியாய்**
**தெள்ளியசிங் கன்வாழ் திருவல்லிக் கேணிதொழ**
**உள்ளிய தெல்லாம் உறும்.**

ஊர்ந்தான் - செலுத்தியவன், சாரதி
சேர்த்தி - ஒன்றாக சேர்ந்து ஒருசேர
பாம்பணையன் - பாம்பின்மேல் பள்ளிகொண்டவன்
உள்ளியது - நினைத்தது. உறும் - வந்து சேரும்.

## 22. திருக்கடிகை (சோளிங்கபுரம்)

அரக்கோணத்திலிருந்து சுமார் 27 கி.மீ. தொலைவில் உள்ளது. பஸ்வசதி உண்டு. சென்னையில் இருந்தும் நேராக சோளிங்கருக்கு பஸ்ஸில் செல்லலாம். இங்கு ஊருக்குள் உற்சவருக்கு ஒருகோயிலும், பெரியமலைமேல் மூலவருக்கு ஒரு கோயிலும், சிறிய மலைமேல் ஆஞ்சநேயர் கோயிலும் உள்ளன.

**1.கீழேயுள்ள கோயில் :**

மூலவர் : இல்லை

உத்ஸசர் : பக்தவத்ஸலப் பெருமாள் [தக்கான்]

2.பெரிய மலை : [கடிகாசலம்]

மூலவர் : யோக நரசிம்மர் [அக்காரக்கனி] கிழக்கு நோக்கி வீற்றிருக்கும் நிலை.

தாயார் : அம்ருத வல்லி [தனிக்கோயில்]

விமானம் : சிம்மகோஷ்டாக் ருதி விமானம்.

தீர்த்தம் : பிரம்ம தீர்த்தம், தக்கான்குளம்.

3. சிறிய மலை :

மூலவர் : யோக ஆஞ்சநேயர். நான்கு கரத்துடன் சங்கு, சக்கரத்தோடு நரசிம்மரை நோக்கியவாறு எழுந்தருளியுள்ளார்.

மங்களாசாசனம் : திருமங்கையாழ்வார் 3 பாசுரங்கள்
பேயாழ்வார் ..... 1 பாசுரம்

விசேடம் : இவ்வூரில் ஒரு கடிகை [சுமார் ½ மணி நேரம்] தங்கியிருந்தாலே முத்திகிடைக்குமாதலால் கடிகாசலம். திருக்கடிகை என்ற பெயர்கள் வந்தது.

**95. ஆரமுத வல்லிகேள்வன் அன்றவுணன் மார்விடந்தோன்**
**சீரனும னேத்துநர சிங்கவன்-பாரதனுள்**
**தண்பூங் கடிகைத் தடங்குன்றம் வீற்றருளும்**
**வண்பூந் துளவன்தாள் வாழ்த்து.**

ஆர் - அழகிய மார்விடந்தோன் - மார்பைப்பிளந்தவன்
அவுணன் - அசுரன் (இரணியன்)

தொண்டை நாட்டுத் திருப்பதிகள்
22 ம் நிறைவு பெற்றது.

# VI. வடநாட்டுத் திருப்பதிகள் - 12

## 1. திருவேங்கடம் (திருப்பதி, திருமலை)

இது ஆந்திர மாநிலத்தில் உள்ளது. அரக்கோணத்தை யடுத்த ரேணு குண்டா ஸ்டேஷனிலிருந்து 11 கி.மீ. தொலைவில் உள்ளது. எல்லா பெரிய நகரங்களிருந்தும் திருப்பதிக்கு பஸ் வசதிகள் உண்டு. இத்தலம் மூன்று கோயில்களை உள்ளடக்கிக் கொண்டுள்ளது.

1. கீழ் திருப்பதி : [கோவிந்தராஜப்பெருமாள் கோயில்]

மூலவர் : கோவிந்தராஜப்பெருமாள் [புஜங்கசயனத்தில் கிழக்கே திருமுகம்]

தாயார் : புண்டரீகவல்லி

2. திருமலை : [மலையின் மேலுள்ள கோயில்]

மூலவர் : திருவேங்கட முடையான், ஸ்ரீநிவாசன், வெங்கடாஜலபதி, பாலாஜி, [நின்ற திருக்கோலம் கிழக்கு நோக்கி சேவையளிக்கிறார்]

உத்ஸவர் : கல்யாண வெங்கடேஸ்வரர், மலையப்பசுவாமி

விமானம் : ஆனந்த நிலய விமானம்

தீர்த்தம் : சேஷாசல சுவாமி புஷ்கரிணி, பாப விநாச தீர்த்தம், ஆகாச கங்கை கோனேரி தீர்த்தம் என 14 தீர்த்தங்கள்

3. திருச்சானூர் : அலர்மேல்மங்காபுரம்

மூலவர் : தாயார் அலர் மேல்மங்கை பத்மாவதி [கிழக்கே திருமுகம்]

தீர்த்தம் : பத்ம சரோவரம்

விசேடம் : திருமலையில் ஸ்வாமிபுஷ்கரிணியின் வடமேற்கு மூலையில் உள்ள ஆதிவராகப்பெருமாளுக்கு தளிகை சமர்ப்பித்த பிறகே ஸ்ரீநிவாச பெருமாளுக்கு சமர்ப்பிக்கப்படுகிறது. இத்திருமலை 7 மலைகளைக் கொண்டதால் ஏழுமலை எனவும் வழங்கப்படுகிறது.

இப்பெருமாளை 10 ஆழ்வார்கள் மங்களாசாசனம் செய்துள்ளனர்.

| | | |
|---|---|---|
| 1. பெரியாழ்வார் ...................... | 7 | பாசுரங்கள் |
| 2. ஆண்டாள் .......................... | 16 | பாசுரங்கள் |
| 3. குலசேகராழ்வார் .................. | 11 | பாசுரங்கள் |
| 4. திருமழிசையாழ்வார் ............. | 15 | பாசுரங்கள் |
| 5. திருப்பாணாழ்வார் ................. | 2 | பாசுரங்கள் |
| 6. திருமங்கையாழ்வார் ............. | 61 | பாசுரங்கள் |
| 7. பொய்கையாழ்வார் ................ | 10 | பாசுரங்கள் |
| 8. பேயாழ்வார் ........................ | 19 | பாசுரங்கள் |
| 9. பூதத்தாழ்வார் ...................... | 9 | பாசுரங்கள் |
| 10. நம்மாழ்வார் ........................ | 52 | பாசுரங்கள் |
| ஆக ................. | 202 | பாசுரங்கள் |

**96.அடியார்க் கருளலர்மேல் மங்கையுறை மார்பா !**
**செடியாய வல்வினைகள் தீர்க்கும் - நெடியோய் !**
**திருவேங் கடம்நின்ற சீநிவாசா! என்றும்**
**ஒருவாதென் நெஞ்சுள் உறை.**

செடியாய வல்வினைகள் - செடிகள் போல் அடர்ந்துள்ள கொடிய வினைகள், நெடியோன் - திருமால்
ஒருவாது - நீங்காமல். உறைதல் - தங்குதல், வாழ்தல்

## 2. திருச்சிங்கவேள்குன்றம் (அஹோபிலம்)

இத்தலமும் ஆந்திரமாநிலத்தில் உள்ளது. சென்னை - மும்பை ரயில் பாதையில் கடப்பா ரயில் ஸ்டேஷனில் இறங்கி அங்கிருந்து பஸ்ஸில் 85 கி.மீ. தொலைவிலுள்ள அர்லகட்டா என்ற ஊரையடைந்து அங்கிருந்து 35 கி.மீ. தூரம் சென்றால் இத்தலத்தையடையலாம். இங்கு மலையடிவாரத்தில் ஒரு கோயிலும் மலையின் மேல் ஒரு கோயிலும் உண்டு.

1. மலையடிவாரத்தில் உள்ள தலம் :

கீழ் அஹோபிலம் :

மூலவர் : பிரகலாத வரதன், லட்சுமி நரசிம்மன். கிழக்கு நோக்கி வீற்றிருக்கும் திருக்கோலம்

உத்ஸவர் : மாலோல நரசிம்மர் மற்றும் 8 நரசிம்ம உற்சவ மூர்த்திகளும் உள்ளனர்.

தாயார் : அம்ருதவல்லி, செஞ்சுலக்ஷ்மி

விமானம் : குகை விமானம்

தீர்த்தம் : இந்திர, நரசிம்ம, பாபநாச, கஜ, பார்க்கவ தீர்த்தங்கள்

2. மேல் அஹோபிலம் [மலையின் மீது 14 கி.மீ. தொலைவில் உள்ளது] குடை வரைக்கோயில்

மூலவர் : அஹோபில நரசிம்மர்

தாயார் : லட்சுமிதேவி

விமானம் : குகை விமானம்

தீர்த்தம் : பவநாசினி

மங்களாசாசனம் : திருமங்கையாழ்வார் 10 பாசுரங்கள்

விசேடம் : இங்கு 9 நரசிம்மர்களின் கோயில்கள் இருப்பதால் இதற்கு நவநரசிம்ம க்ஷேத்திரம் என்ற பெயரும்

**97. பண்டவுணன் மார்விடந்து பாலகனைக் காத்திட்ட**
**விண்டுளவ மாலமுத வல்லிகேள்வன்-அண்டர்கோன்**
**சிங்கவேள் குன்றமதில் சிந்தை உவந்தமர்ந்த**
**புங்கவன்தன் தாள்மலரைப் போற்று.**

மார்விடந்து - மார்பைப் பிளந்து
பாலகன் - சிறுபிள்ளை (பிரகலாதன்)
சிந்தை - மனம். உவந்து - மகிழ்ந்து
புங்கவன் - சிறந்தோன், சிறப்புமிக்கவன்
பண்டு - முன்பு அவுணன் - அசுரன் (இரணியன்)

# 3. திருஅயோத்தி

இத்தலம் உத்திரப்பிரதேசத்தில் உள்ளது. வாரணாசிக்கும் (காசி) இலக்னோவிற்கும் செல்லும் கிழக்கு ரயில்வே மார்க்கத்தில் பைசாபாத் என்ற ஸ்டேஷனில் இறங்கி 5 கி.மீ. தூரம் சென்றால் அயோத்தியை அடையலாம். இது சரயு நதிக்கரையில் அமைந்துள்ளது.

மூலவர் : ஸ்ரீராமன், சக்ரவர்த்தித்திருமகன், ரகுநாயகன் [வடக்குநோக்கி வீற்றிருக்கும் திருக்கோலம்]

தாயார் : சீதாப் பிராட்டி

விமானம் : புஷ்கலவிமானம்

தீர்த்தம் : பரமபத, சத்திய புஷ்கரிணி, சரயுநதி

மங்களாசாசனம் : பெரியாழ்வார் 6 பாசுரங்கள், குலசேகராழ்வார் 4 பாசுரங்கள், தொண்டரடிப் பொடியாழ்வார், திருமங்கையாழ்வார், நம்மாழ்வார் தலா ஒரு பாசுரம். ஆக 13 பாசுரங்கள்

விசேடம் : இராமபிரான் அவதாரஸ்தலம். முத்திதரும் 7 தலங்களுள் இதுவும் ஒன்று.

98. **மன்னு புகழயோத்தி மாநகரில் வந்துதித்து**
**தென்னிலங்கை மன்னன் சிரம்துணித்த-இன்னமுதன்**
**சீராரும் பொற்செல்வி சீதைக் கினியவனாம்**
**சீராமன் சேவடிசீர் செப்பு.**

தென்னிலங்கைமன்னன் - இராவணன்
உதித்தல் - தோன்றுதல், பிறத்தல்

## 4. திருநைமிசாரண்யம்

இது உத்திராஞ்சல் மாநிலத்தில் உள்ளது. கொல்கத்தா - டேராடூன் ரயில் மார்க்கத்தில் பாலமாங் என்ற ஸ்டேஷனில் இறங்கி அங்கிருந்து சீத்தாப்பூர் செல்லும் கிளை ரயிலில் ஏறி நைமிசாரண்யா என்ற ரயில் நிலையத்தில் இறங்க வேண்டும். பிறகு ரயிலடியிலிருந்து 3 கி.மீ. தூரம் சென்று இத்தலத்ந்தயடைய வேண்டும்.

மூலவர் : தேவராஜன், [ஸ்ரீஹரி] கிழக்கு நோக்கி நின்ற கோலம்

தாயார் : ஸ்ரீஹரிலக்ஷ்மி, [புண்டரீக வல்லி]

விமானம் : ஸ்ரீஹரி விமானம்

தீர்த்தம் : சக்ர தீர்த்தம், கோமுகிநதி

தலமரம் : தபோவனம்

மங்களாசாசனம் : திருமங்கையாழ்வார் 10 பாசுரங்கள்

விசேடம் : இங்கு பகவான் ஆரண்ய ஸ்வரூபியாக இருப்பதாக நம்பி காட்டையே வணங்குகிறார்கள்.

99. **நேமியொடு சங்கேந்தும் நீள்புகழ் தேவராசா!**
**நைமிசாரண் யம்நின்ற நாரணனே! -எம்மிறைவா!**
**புண்டரீக வல்லிதோய் பொன்மார்பா! ஞாலமேழும்**
**உண்டவனே! காப்பாய் உவந்து.**

நேமி - சக்கரம். நீள்புகழ் - மிகுந்த புகழ்

## 5. திருசாளக்கிராமம் (முக்திநாத்)

இத்தலம் நேபாளநாட்டில் உள்ளது. காட்மாண்டு நகரத்திற்கு வடமேற்கே சுமார் 250 கி.மீ. தொலைவில் கண்டகி நதிக்கரையில் இருக்கிறது. முக்திநாத் எனவும் இதனைக்கூறுவர். நெடுஞ்சாலையிலிருந்து 160 கி.மீ. தூரத்தில் மலைமேல் உள்ளது.

மூலவர் : ஸ்ரீமூர்த்தி, முக்தி நாராயணன் [மேற்கு நோக்கி நின்ற கோலம்.]

தாயார் : ஸ்ரீதேவி நாச்சியார்

விமானம் : கனக விமானம்

தீர்த்தம் : சக்கர தீர்த்தம், கண்டகிநதி

மங்களாசாசனம் : பெரியாழ்வார் 2 பாசுரங்கள்
திருமங்கையாழ்வார் 10 பாசுரங்கள்

விசேடம் : கோயிலைச் சுற்றி 108 நீருற்றுக்கள் உள்ளன. சாளக்கிராமங்கள் உருண்டை, தட்டை, முக்கோணம், சங்கு, சக்கரம் முதலானவை பலவண்ணங்களில் அமைந்துள்ளன. தானாகவே சுயம்புவாகத் தோன்றிய தலம்.

100. **செய்யவளாம் சீதேவி சிந்தைக் கினியவனாம்**
**வையமேத்தும். மூர்த்தியெனும் வான்மாயன்-வையத்துள்**
**சந்தமிகு பூம்பொழில்சூழ் சாளக்கி ராமமேவி**
**வந்து நின்ற நாரணன்தாள் வாழ்த்து.**

## 6. திருவதரியாச்சிரமம் (பத்ரிநாத்)

இது உத்திரப்பிரதேசத்தில் உள்ள தலம். பத்ரிநாத் என்ற இத்தலம் ஹரித்துவாரியிலிருந்து 300 கி.மீ. தூரத்தில் உள்ளது. இமயமலைமீது பேருந்தில் பயணிக்க வேண்டும். அலகா நந்தா நதிக்கரையில் கோயில் அமைந்துள்ளது.

மூலவர் : பத்ரிநாராயணன் [கிழக்கு நோக்கி வீற்றிருக்கும் நிலை]

தாயார் : அரவிந்த வல்லி [தனிக்கோயில்]
விமானம் : தப்தகாஞ்சன விமானம்
தீர்த்தம் : தப்த குண்டம் [இது வெந்நீர் ஊற்று]
தலவிருட்சம் : பதரீ [இலந்தைமரம்]
மங்களாசாசனம் : பெரியாழ்வார் 1 பாசுரம்.
திருமங்கையாழ்வார் 21 பாசுரங்கள்.

விசேடம் : தானாக தோன்றியதலம். மூலவர் ஜடாமுடி, நான்கு கரங்கள், சங்குசக்கரம் ஏந்தியோக முத்திரைகாட்டி பத்மாசானத்தில் தவக்கோலத்தில் வீற்றிருக்கிறார்.

101. **அண்டரேத்தும் மாயோன் அரவிந்த வல்லிகேள்வன்**
**வண்டுமுரல் சோலை வதரியமர் - வண்டுளவன்**
**பத்தர்தம் உள்ளமுறை பத்ரிநா ராயணனை**
**நத்திப் பணிதல் நலம்.**

வதரி என்றாலும் பத்ரி என்றாலும் இலந்தை மரத்தைக் குறிக்கும். நத்தி - விரும்பி

## 7. திருக்கண்டங்கடிநகர் (தேவப்பிரயாகை)

இது ஹரித்துவாரிலிருந்து பத்ரிநாத் செல்லும் மார்க்கத்தில் சுமார் 80 கி.மீ. தொலைவில் உள்ளது. அலகாநந்தா நதியும் பாகீரதிநதியும் சங்கமமாகும் இடத்திற்கு அருகாமையில் உள்ளது. கடல்மட்டத்திலிருந்து 1700 அடி உயரம்.

மூலவர் : நீலமேகப்பெருமாள், புருஷோத்தமன்.
[கிழக்கு நோக்கி நின்ற கோலம்.]
தாயார் : புண்டரீகவல்லி.
விமானம் : மங்களவிமானம்
தீர்த்தம் : மங்களதீர்த்தம், ஆதிகங்கை
மங்களாசாசனம் : பெரியாழ்வார் 11 பாசுரங்கள்.

விசேடம் : இங்கு பெருமாளை ரகுநாத்ஜீ என்று அழைக்கின்றனர். இது ஓர் புண்ணியத்தலம். பரத்துவாஜர் இங்கு வேள்வி செய்து சப்தரிஷிகளில் ஒருவரானார்.

102. **மண்டுபுகழ் நீலமேகன் மால்புரு டோத்தமன்**
**கண்டங் கடிநகரான் கன்மந்தீர்-விண்டவனாம்**
**புண்டரீக வல்லியொடு பூதலத்தோ ருய்யநின்ற**
**புண்டரீகக் கண்ணன்தாள் போற்று.**

பூதலம் - பூமி.

## 8. திருப்பிருதி (ஜோஷிமட் -நந்தப்பிரயாகை)

இது இமயமலைப்பகுதியில் பத்ரிநாத் செல்லும் வழியில் ஹரித்துவாரிலிருந்து 246 கி.மீ. தூரத்தில் உள்ளது. கடல் மட்டத்திலிருந்து 6150 அடி உயரத்தில் உள்ளது.

மூலவர் : பரமபுருஷன் [புஜங்க சயனம்]
கிழக்கு நோக்கிய திருமுகம்.

தாயார் : பரிமளவல்லி நாச்சியார்

விமானம் : கோவர்த்தன விமானம்

தீர்த்தம் : இந்திரதீர்த்தம், கோவர்த்தனதீர்த்தம்
மானசரஸ்

மங்களாசாசனம் : திருமங்கையாழ்வார்– 10 பாசுரங்கள்

விசேடம் : இப்போது ஆதிசங்கரரால் நிறுவப்பட்ட வாசுதேவர் ஆலயத்தையே ஆழ்வார்பாடியதாக கூறுகின்றனர்.

103. **ஆராமம் சூழ்ந்த அணிப்பிருதி கண்வளர்வோன்**
**பாரேழும் உண்ட பரந்தாமன் - ஏரார்**
**பரிமள வல்லிமேவும் பைந்துளவ மார்பன்**
**பரம புருடன்தாள் பற்று.**

ஆராமம் - மலைமீதுள்ள சோலை. அணி - அழகிய
ஏரார் - அழகுமிகுந்த
பைந்துளவன் - பசுமையான துளசிமாலை அணிந்துள்ளவன்

## 9. திருத்துவாரகை (துவரை, துவராபதி)

இது குஜராத் மாநிலத்தில் உள்ளது. பம்பாய், ஆமதாபாத், வீரம்காம், ராஜ்கோட், ஜாம்நகர் வழியாக ஓகாதுறைமுகம் செல்லும் மார்க்கத்தில் துறைமுகத்துக்கு சுமார் 32 கி.மீ. தொலைவில் துவாரகா ரயில்வே ஸ்டேஷன் உள்ளது. கோயிலுக்கு ஸ்டேஷனிலிருந்து 4 கி.மீ. தூரம் வண்டியில் போய்ச்சேரலாம்.

மூலவர் : கல்யாண நாராயணன், துவாரகா தீசன்
மேற்கு நோக்கி நின்ற கோலம்

தாயார் : கல்யாண நாச்சியார் [லக்ஷ்மி ஸ்ரீ] ருக்மணி
அஷ்ட மகிஷிகள்.

விமானம் : ஹேமகூட விமானம்

தீர்த்தம் : கோமதிநதி, கடல் சங்கமம்

மங்களாசாசனம் : பெரியாழ்வார் 5 பாசுரங்கள்
ஆண்டாள் 4 பாசுரங்கள்,
திருமங்கையாழ்வார் 2 பாசுரங்கள்,
திருமழிசையாழ்வார் – 1 பாசுரம்,
நம்மாழ்வார் 1 பாசுரம் ஆக 13 பாசுரங்கள்.

விசேடம் : இது முத்திதரும் 7 தலங்களுள் ஒன்று. மோட்சத்துக்கு துவாரமாக இருப்பதால் துவாரகை என்ற பெயர் உண்டாயிற்று.

**104. பஞ்சவர்க்காய் தூதேகி பாரதங்கை செய்துகந்தோன்**
**விஞ்சு புகழ்துவரை வேந்தனவன்-மஞ்சுவணன்**
**கல்யாண நாச்சி கருத்துறையும் கண்ணபிரான்**
**கல்யாண நாரணனே காப்பு.**

பாரதங்கை செய்துகந்தோன்-பாரதப்போரை நடத்தி பாண்டவருக்கு வெற்றியைத்தந்தவன்
மஞ்சு - மேகம். கருத்து - மனம், எண்ணம்

## 10. திருவடமதுரை (மதுரா)

### (பிருந்தாவனம், கோவர்த்தனம் அடங்கியது)

டெல்லியிலிருந்து ஆக்ரா போகும் ரயில்மார்க்கத்தில் மதுரா என்ற ஜங்ஷனிலிருந்து சுமார் 3 கி.மீ. தூரத்தில் கோயில் உள்ளது. டெல்லியிலிருந்து மதுரா ஜங்ஷன் 48 கி.மீ. தூரத்தில் உள்ளது.

மூலவர் : கோவர்த்த நேசன், பாலகிருஷ்ணன்
கிழக்கு நோக்கி நின்ற கோலம்

தாயார் : சத்தியபாமா நாச்சியார்

விமானம் : கோவர்த்தன விமானம்

தீர்த்தம் : இந்திர தீர்த்தம், கோவர்த்தன தீர்த்தம்,
யமுனா நதி

மங்களாசாசனம் : பெரியாழ்வார் 16 பாசுரங்கள்,
ஆண்டாள் 19 பாசுரங்கள்,
தொண்டரடிப்பொடியாழ்வார் 1 பாசுரங்கள்
திருமங்கையாழ்வார் 4 பாசுரங்கள்,
நம்மாழ்வார் 10 பாசுரங்கள்
ஆக 50 பாசுரங்கள்

விசேடம் : கிருஷ்ணன் அவதாரத்தலம் முத்திதரும் தலங்கள் ஏழில் இதுவும் ஒன்று. வடமதுரை, பிருந்தாவனம், கோவர்த்தனம் என்ற மூன்றும் சேர்ந்து ஒரேதலமாக வணங்கப்படுகிறது.

105. **வடமதுரை மாநகரில் வந்துதித்த மாயோன்**
**படவரவின் உச்சிமிசை பாய்ந்து -நடஞ்செய்தோன்**
**கோவர்த் தனமெடுத்துக் கோவலரைக் காத்தபிரான்**
**கோவர்த்த நேசன்சீர் கூறு.**

படஅரவு - படத்தையுடையபாம்பு (காளியன்)
நடம் - நடனம்
**கோவர்தனம் என்ற மலையை எடுத்து ஆயர்களை கல்மழையினின்றும் காத்தவன்**

## 11. திருவாய்ப்பாடி (கோகுலம்)

மதுரா ஜங்ஷனிலிருந்து வண்டிபிடித்துக்கொண்டு 5 கி.மீ. தூரமுள்ள யமுனைப் பாலத்தைக் கடந்து அங்கிருந்து 7 கி.மீ. பஸ்ஸில் சென்று இத்தலத்தை அடையலாம்.

மூலவர் : நவமோகன கிருஷ்ணன்.
கிழக்கு நோக்கி நின்ற திருக்கோலம்.

தாயார் : ருக்மணி, சத்தியபாமா

விமானம் : ஹேமகூட விமானம்

தீர்த்தம் : யமுனா நதி

மங்களாசாசனம் : பெரியாழ்வார் 10 பாசுரங்கள்
ஆண்டாள் 5 பாசுரங்கள்
திருமங்கையாழ்வார் 7 பாசுரங்கள்
ஆக 22 பாசுரங்கள்.

விசேடம் : கோயிலின் வாசலிலேயே யமுனை நதி ஓடுகிறது. கண்ணன் இளமை காலத்தில் வாழ்ந்த இடமே கோகுலம். நந்தகோபர், யசோதா, பலராமர் போன்றோரின் மரத்தாலான சிலைகளுக்கடியில் குழந்தை கிருஷ்ணன் ஒரு சிறிய மரத்தொட்டிலில் சேவை சாதிக்கிறார்.

106. **ஒருத்தியால் தோன்றி ஒருத்திபால் உண்ட**
**கருத்தனாம் ஆய்ப்பாடிக் கண்ணன்-ஒருத்தனவன்**
**நந்தகோபன் மைந்தன் நவமோ கனகிருட்ணன்**
**நந்தமிடர் தீர்ப்பான்தாள் நாடு.**

ஒருத்திபால் தோன்றி - ஒருத்தியிடம் பிறந்து (தேவகி)
ஒருத்திபால் உண்ட - ஒருத்தியினுடைய பாலை உண்டவன் (யசோதையினுடைய பால்)
கருத்தன் - இறைவன் ஒருத்தன் - ஒப்பற்றவன்

## 12. திருப்பாற்கடல் (வ்யூகம்)

இந்த சரீரத்தோடு போக முடியாது. அடியார்கள் பரமபதித்தபின் பெருமாளே அவர்களை அழைத்துச் சென்று பாற்கடல்நாயகனாக சேவை சாதிக்கிறார். நிலவுலகில் பார்க்க

முடியாது. வேண்டுமானால் வடகடலுக்குச் சென்று அதன்கரையில் நின்று சேவிக்கலாம்.

மூலவர் : க்ஷீராப்தி நாதன் [வியூகநிலை] ஆதிசேஷசயனம். தெற்கேதிருமுகம்.

தாயார் : கடல்மகள் நாச்சியார்– ஸ்ரீதேவி, பூதேவி

விமானம் : அஷ்டாங்க விமானம்

தீர்த்தம் : அமிர்த தீர்த்தம், திருப்பாற்கடல்

மங்களாசாசனம் :

| | | | |
|---|---|---|---|
| 1. | பெரியாழ்வார் ...................... | 5 | பாசுரங்கள் |
| 2. | ஆண்டாள் .......................... | 3 | பாசுரங்கள் |
| 3. | குலசேகராழ்வார் .................. | 2 | பாசுரங்கள் |
| 4. | திருமழிசையாழ்வார் ............. | 13 | பாசுரங்கள் |
| 5. | தொண்டரடிப்பொடியாழ்வார்.... | 1 | பாசுரங்கள் |
| 6. | திருமங்கையாழ்வார் ............. | 11 | பாசுரங்கள் |
| 7. | பொய்கையாழ்வார் ............... | 1 | பாசுரங்கள் |
| 8. | பேயாழ்வார் ........................ | 4 | பாசுரங்கள் |
| 9. | பூதத்தாழ்வார் ...................... | 2 | பாசுரங்கள் |
| 10. | நம்மாழ்வார் ........................ | 9 | பாசுரங்கள் |
| | ஆக | 51 | பாசுரங்கள் |

விசேடம் : இங்கு பெருமாள் யோகநித்திரையில் ஆதிசேஷன்மீது சயனக்கோலத்தில் திருமகளும் நிலமகளும் திருவடி வருட விளங்குகிறார். பிரமன் தோற்றம் பெற்ற தலம்.

**107. படவரவிற் பாற்கடலுள் பள்ளிகொள் மாயோன்**
**கடல்மகள்தன் கேள்வன் கருணைக் -கடலமுதன்**
**சீராப்தி நாதன் திருவடியை சேவித்தால்**
**வாராது என்றும் வழு.**

வடநாட்டுத் திருப்பதிகள்

**12** ம் நிறைவுற்றது

# VII. திருநாடு - 1

## 1.திருப்பரமபதம்

இது பூலோகத்தில் இல்லை. மோக்ஷ நிலை எம்பெருமானின் பரத்துவம் விளங்கும் இடம். வைணவ அடியார்கள் பரமபதித்தபின் பகவானே அவர்களுக்கு பரமபதத்தில் நிரந்தரமாக வாழச் செய்து மகிழ்விப்பான்.

மூலவர் : பரமபதநாதன் [தெற்கு நோக்கி வீற்றிருந்த திருக்கோலம்]

தாயார் : பெரிய பிராட்டியார்

விமானம் : அநந்தாங்க விமானம்

தீர்த்தம் : விரஜாநதி, அயிரமத புஷ்கரிணி

குறிப்பு : இங்கே சென்றவர்கள் யாரும் திரும்புவதில்லை. பெருமாள், ஸ்ரீதேவி, பூதேவி, நீளா தேவியுடன் நித்தியர்களும், முத்தர்களும் தொழுதவாறு விளங்குகிறார்.

மங்களாசாசனம் :

| | | |
|---|---|---|
| 1. பெரியாழ்வார் ...................... | 4 | பாசுரங்கள் |
| 2. ஆண்டாள் ......................... | 1 | பாசுரம் |
| 3. திருப்பாணாழ்வார் ................ | 1 | பாசுரம் |
| 4. திருமழிசையாழ்வார் ............... | 2 | பாசுரங்கள் |
| 5. பேயாழ்வார்.... | 1 | பாசுரம் |
| 6. திருமங்கையாழ்வார் ............. | 1 | பாசுரம் |
| 7. பொய்கையாழ்வார் ................ | 2 | பாசுரங்கள் |
| 8. நம்மாழ்வார் ........................ | 24 | பாசுரங்கள் |
| ஆக | 36 | பாசுரங்கள் |

**108. புலனைந்து மேயும் பொறிவாய் திருத்தி**
**நலமந்த மில்லதோர் நாடு - கலந்து**
**பரம பதநாதன் பாதநிழல் வைகும்**
**பரமனடி யார்தாள் பரவு.**

புலன் ஐந்து - சுவை, ஒளி, ஊறு, ஓசை, நாற்றம்
பொறி ஐந்து - வாய், கண், உடல், செவி, மூக்கு
பரமபதத்திலுள்ளவர்கள் ஐந்து புலன்களில் திரியும் இந்திரியங்களுக்கு ஆட்படாமல் அவற்றைத் தவிர்த்தவர்களாவர்.
நலமந்தமில்லதோர்நாடு - முடிவில்லாத நன்மைகள் திகழும்படியான திருநாடு (பரமபதம்)

திருநாடு ஒன்றும் நிறைவுற்றது.

## நூற்பயன்

வில்லாண்ட விண்டு விளங்குபதி நூற்றெட்டும்
நல்லாண் நகர்ஆதி மூலம்தன் –சொல்லாண்டு
ஆய்ந்தபா ஓதின் அமரரோ டொப்பாவர்
வாய்ந்தவிம் மண்ணகத்தே வாழ்ந்து.

## வாழ்த்து

ஆழ்வார்கள் வாழ்க; அருளிச் செயல்வாழ்க;
தாழ்விலாச் செல்வத் திருப்பதிகள் –வாழ்க;
செடியாய வல்வினைகள் தீர்க்கும் திருமால்
அடியாரும் வாழ்க பல்லாண்டு.

நூற்றெட்டுத் திருப்பதி
வெண்பா நிறைவு பெற்றது.

---

சுபம் மங்களம்

---

